கழக வெளியீடு: ௲௩௮.

# திருக்குறள் விளக்கக் கதைகள்

[தொகுதி ௨]

(பொருட்பால்)

ஆசிரியர் :

திரு. க. இனியன்

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்.
திருநெல்வேலி-6. 1966 சென்னை 1.

# பதிப்புரை

தெய்வப் புலமைத் திருவள்ளுவதேவரின் திருக்குறள் பெருமையை உலகம் இன்று நன்கு உணர்ந்துகொண்டது. தமிழ்மறையாகிய திருக்குறளுக்கு இன்று தமிழ்நாடு பெருமதிப்பு வைத்துப் போற்றுவது தமிழ்த்தாய் செய்த தவப்பயனே ஆகும். மக்கள் அனைவரும் திருக்குறளைக் கற்பதால் தீயவழியிற் செல்லாது தூய வழியிற் செல்வர். திருக்குறளுக்கு எத்தனையோ அறிஞர்கள் உரையெழுதி விட்டார்கள். இன்னும் எத்தனை உரைகள் தோன்றுமோ தெரியவில்லை.

திருக்குறளைப்பற்றிய கதைகள் நாட்டிலே இன்னும் மிகுதியாகத் தோன்றவில்லை. திருக்குறட் கதைகள் மிகச் சிலவே தோன்றியுள்ளன. கதைவழி திருக்குறளின் பயனை எளிதிலே அடையுமாறு திருக்குறள் கதைகள் எழுதப்பெற்றுள்ளன. அறத்துப்பாலில் நாற்பத்திரண்டு குறட்பாக்கட்கும் பொருட்பாலில் எழுபது குறட்பாக்களுக்கும் கதைகள் அமைக்கப் பெற்றுள்ளன. இக்கதைகளிற் சில பழங்கதைகள். பல கதைகள் வாழ்க்கை முறையில் நிகழ்ந்துவரும் உண்மைகளை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பெற்றவை.

கதைகள் மிக இனிய எளிய நடையில் அமைந்துள்ளன. கதைகள் ஆங்காங்கு நகைச்சுவையைக் கொண்டுள்ளமையின் கற்பவர்கட்கு இனிமையை அளிக்கும். இக் கதைகளை ஆசிரியர் க. இனியன் அவர்கள் தமது பெயருக்கேற்ப இனிய முறையில் அமைத்துள்ளார். இக் கதைகளைக் கற்பார் திருக்குறளின் பொருள் நுட்பங்களை இனிமையுடன் உணர்ந்து மகிழ்வர். இக் கதைகள் பள்ளி மாணவர்கள், பெரியவர்கள், கற்றவர்கள் கல்லாதவர்கள் ஆகிய அனைவருக்கும் உரிமையாகும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்

# திருக்குறள் விளக்கக் கதைகள்

[இரண்டாம் புத்தகம்]

## ௧. தேவரைக்காத்த புரஞ்சயன்

முன்னாளில் புரஞ்சயன் என்னும் பெயருடைய ஓர் அரசன் அயோத்தியில் அரசு புரிந்து கொண்டிருந்தான். அந்த மன்னன் அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் ஆகிய நல்லியல்புகளிலே சிறந்து திகழ்ந்தான். அவன் அயோத்தியிலே அரசு புரிந்துகொண்டிருக்கும் நாளிலே தேவர்கட்கும் அவுணர்கட்கும் போர் விளைந்தது. போரில் தேவர்கள் தோல்வியடைந்து புறங்காட்டி ஓடினார்கள். அவர்கள் திருமாலிடஞ் சென்று அவுணர்களை வென்று தம்மைக் காக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். திருமால் புரஞ்சயன் பண்புகளை இந்திரனுக்குரைத்தார். 'புரஞ்சயன்பாற் சென்று முறையிட்டுக் கொள்வையாயின் அவன் அவுணர்களை வென்று நின்னையும் தேவர்களையும் காப்பான்' என்று அருளினார்.

தேவர்கோன் தேவர் சிலருடன் மண்ணுலகடைந்தான். புரஞ்சயனைக் கண்டு நிகழ்ந்தவைகளைப் புகன்றான். தான் அவுணர்களை வென்று தேவர்களைக் காப்பதாகப் புரஞ்சயன் உறுதிமொழி புகன்று விரைந்து போர்க்கோலங்கொண்டு விண்ணுலகடைந்தான். அவுணர்களை யெதிர்த்து ஆண்மையுடன் போர் செய்

தான். போர் கடுமையாக நிகழ்ந்தது. இறுதியில் அவுணர்கள் தோற்றார்கள். இழந்து நின்ற அரசை இந்திரன் இனி தடையுமாறு புரஞ்சயன் செய்தான்.

புரஞ்சயனுடைய அஞ்சாமையையும் ஆண்மையையும் தேவர்கள் வியந்து போற்றினார்கள். இந்திரன் புரஞ்சயனை அழைத்துச் சென்று பெரிதும் போற்றி நலம் பல செய்தான். அப் புரஞ்சயன் இத்தகைய அஞ்சாமையையும் இரப்போர்க்கீதலாகிய கொடையுடைமையையும் அறிவு ஊக்கம் ஆகியவைகளையும் பெற்றிருந்தமையால் அவன் புகழ் எங்கும் நிலவி நின்றது.

இராமனும் அந்தப் புரஞ்சயன் வழியிலே தோன்றியவன்தான். விண்ணுலகத்தை அரசு புரியும் இந்திரனே வந்து குறையிரக்கும்படியான உயரிய நிலையில் அப் புரஞ்சயன் அமைந்து நின்றானென்னின், அவனுடைய மாண்பினைக் கூறவும் வேண்டுமோ? அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் ஆகிய நான்கையும் உலகம் புரஞ்சயன் ஒருவனிடத்திலே தானே கண்டு மகிழ்ந்தது.

அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு.

குறள், இறைமாட்சி, செய். 2.

(இ - ள்.) அரசனுக்கு இயல்பாவது, துணிவுடைமை கொடை நல்லறிவு மனவெழுச்சி ஆகிய இந்த நான்கு குணங்களும் நடுவே நீங்காது நிற்றலாம்.

# உ. கைப்பொருள் தன்னில் மெய்ப்பொருள் கல்வி

ஒரு பெரிய நகரத்திற் பெருங்கலாம் மூண்டது. ஊரினர் இருகட்சியினராகப் பிரிவுபட்டனர். கொலை புரிதல், கொள்ளையடித்தல், தீ வைத்தல் முதலிய தீச் செயல்கள் எங்கும் மிகுந்தன. அச்சமடைந்த மக்கள் அரிய பொருள்களையெல்லாம் அள்ளிக்கொண்டு ஊரை விட்டு ஓடினர். சிலர் அணிகலன்கள் பொருள்கள் முதலியவைகளை எடுத்துக்கொண்டு ஓடினர். சிலர் ஆடு மாடுகள் முதலியவற்றை உடன் கொண்டு சென்றனர். அவ்வூரிலிருந்த ஓரறிஞர் எத்தகைய பொருளையும் எடுத்துக்கொள்ளவில்லை. நமக்குள்ள கல்விப் பொருள் ஒன்றே போதும். கைப் பொருள்களை யெடுத்துச் சென்றால் காப்பாற்றுவது தொல்லையாவதுடன் எடுத்துச் செல்வதும் அல்லலாக முடிவு பெறும் என்று முடிவு செய்தார். தம் இல்லத்திலிருந்த அரிய பொருள்களில் ஒன்றையும் அவர் எடுத்துக்கொள்ளவில்லை. உடுத்திய உடையுடன் தம்முடைய கல்விப் பொருளையே பெரிதாக நினைத்து அவர் புறப்பட்டார். மக்கள் அனைவரும் ஒரே கூட்டமாக ஒரே வழியாகச் செல்லவில்லை. மூலைக்கொருவராக அவரவர்கட்குத் தோன்றிய வழியில் ஊரைத் தாண்டி ஓடினர். நடுவழியிற் கள்ளர்கள் பலர் மக்கள் பொருள்களுடன் ஓடுதலை யுணர்ந்து வழிமறித்தனர். மக்கள் கூட்டமாகச் சென்றிருந்தால் கள்ளர் கையிற் சிக்காமற் சென்றிருக்கலாம். தனித் தனியே சென்றபடியால் கள்ளர்களிடம் அகப்பட்டுக் கொண்டனர். அக் கள்ளர்களோ, அம் மக்கள் மாட்டுச் சிறிதும்

இரக்கம் காட்டாமல் அவர்களிடமிருந்து பொருள்களை யெல்லாம் பிடுங்கிக்கொண்டு ஓடிப்போயினர். வருந்திச் சுமந்து சென்ற பொருள்களையும் வழியிற் பறி கொடுத்த மக்கள், சென்றவிடங்களில் வருந்தினர்.

புலவரோ, கையிற் பொருளுடன் செல்லாதபடி யால், வழியில் அவருக்குத் தொல்லையேற்படுவதற்கே இடமில்லாமற் போயிற்று. ஓர் ஊரை யடைந்து சில செல்வர்களிடம் தமது கல்விப் பெருமையைக் காட்டினர். விரும்பிய சிலருக்குக் கல்வி கற்பித்தார். கொடையாளிகளாக விளங்கியவர்களைப் புகழ்ந்து பாடினர். இச் செயல்களால் புலவருக்குத் தக்க பொருள் வருவாய் ஏற்பட்டது. தம்மூரில் இருந்து ஓடி வந்த பலரையும் அவர் காப்பாற்றினர். அஞ் ஞான்றுதான் மக்கள் அறிஞர் பெருமையை அறிந் தனர். 'அந்தோ! நாம் புலவரைப்போல மெய்ப் பொருளைத் தேடாது பொய்ப் பொருளாகிய செல்வத் தையே மெய்ப்பொருளாக மதித்து அறிவிழந்தோமே!' என்று வருந்தினர். கெடுதியற்ற சிறந்த செல்வம் கல்விதான் என்பதையும் பொருட் செல்வம் ஒரு பொருளாகமாட்டாதென்பதையும் அன்று அவர்கள் ஐயமற அறிந்தனர்.

கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை.

**கல்வி, செய். 10.**

(இ - ள்.) அழிதல் இல்லாத சிறந்த செல்வமாவது கல்வி யறிவேயாகும்; கல்வி யொழிந்த பிறபொருள்கள் அழிவில்லாத செல்வங்கள் அல்ல.

## ௩. காளமேகப் புலவரும் கவிராயர்களும்

காளமேகப்புலவர் என்பவர் திருவானைக்காவில் எழுந்தருளிய இறைவியின் இனிய திருவருளால் அறிவு நலம் முற்றும் ஒருங்கே அமையப்பெற்றவர். எவர் எத்தகைய கடுமையான குறிப்புக்கள் கொடுப்பினும் அம்மையின் அருளால் மிக எளிதாகவும் விரைவாகவுஞ் செய்யுள் செய்திடுவார். அருட்புலவர்கட்கு அருமையானது யாதுளது? ஒருகால் காளமேகப்புலவர் திருமலைராயன் பட்டினத்திற்குச் சென்றார். அங்கு அந்நாளில் ஆட்சி புரிந்திருந்த மாட்சிமிக்க அரசன்பாற் சென்றார். அவ்வரசனுடைய அவையில் புலவர்கள் பலர் அமைந்திருந்தார்கள். அவர்கள் அனைவருக்கும் தலைவராக அதிமதுர கவிராயரென்பவர் விளங்கியிருந்தார். அப்புலவர்கள் பன்னூல்களையும் பளகறக்கற்ற பண்புடையவர்களல்லர். சில நூல்களைக் கற்றுச் சிற்றுணர்வு பெற்றவர்கள். ஆயினும், அவர்கள் தம்மை முற்றுணர்வுடையவராக எண்ணிச் செருக்கியிருந்தார்கள். அரைகுறையறிவால் குறைகுடம்போல் குமுறி நின்றார்கள்.

அரசன்பாற் சென்ற காளமேகப்புலவர் அங்கமர்ந்திருந்த புலவர்களைப் பார்த்து, 'நீங்கள் யாவர்?' என்று கேட்டார். அடக்கமற்ற அப்புலவர்கள் பெருமிதத்துடன் 'நாங்கள் கவிராயர்கள்!' என்று இறுமாப்புடன் பதிலுரை பகர்ந்தார்கள். குரங்குகட்குக் கவி என்று வடமொழியிற் பெயர். அப்புலவர்கள் பெருமிதத்தைக் கண்ட காளமேகப்புலவர், அப் புலவர்கள் தங்களைக், 'குரங்கரசர்கள்' என்று கூறியதாகப் பொருள் கொண்டு, 'நீங்கள் கவிராயர்களாயின், வால் எங்கே? நீண்ட வயிறு எங்கே? முன் இரண்டு கால் எங்கே?

உட்குழிந்த கண் எங்கே' என்று பாடினான் கேட்டு எள்ளி நகையாடினார்.

பிறகு காளமேகப்புலவருக்கும் அதிமதுரகவி முதலான புலவர்கட்கும் சொற்போர் நடைபெற்றது. அதிமதுரகவியின் கூட்டத்தார் நன்கு கல்லாதவர்களானமையால் தம் மனம் போனவாறு பல பாடல்களுக்குக் குறிப்புக்கொடுத்துப் பாடச்சொன்னார்கள். எல்லாவற்றிற்கும் காளமேகப்புலவர் எளிதாகப் பதில் அளித்தார். நிரம்பிய நூலறிவு அற்ற அவர்கள் அன்று காளமேகப்புலவரிடம் சொற்போர் நிகழ்த்தியது பயனற்றதாக முடிந்தது. காளமேகப்புலவர் அரசனையும் அப்புலவர்களையும் இழித்துப் பாடியதுடன் அவ்வூரிலே மண்மாரியும் பெய்யுமாறு வசைபாடிச் சென்றார். நிரம்பிய நூலறிவு இல்லாமல் அவையின்கண் ஒன்றினைச் சொன்னால் அது பயனற்ற கூற்றாக முடியுமென்பதை அப்புலவர்கள் அன்று உணர்த்திநின்றார்கள்.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

கல்லாமை, செய். 1.

(இ-ள்.) மிகுந்த நூலுணர்வு இல்லாமல் அவையின்கண் ஒருவன் ஒன்றினைச் சொல்லுதல், வரையறை செய்யப்பட்ட இடம் இல்லாமல், உண்டையுருட்டினாற்போலும்.

## ௪. கதைகேட்டுயர்ந்த காவலன் மக்கள்

பாடலிபுரம் என்னும் நகரினை முன்னாளில் சுதரிசனன் என்னும் பெயரையுடைய அரசன் அரசுபுரிந்து கொண்டிருந்தான். அவன் பல நூல்களையும் நன்கு கற்றுணர்ந்தவன். அறநெறி பிறழாதவன். அவ்வரசனுக்கு ஏழுமக்கள் பிறந்தார்கள். அவர்கள் தகுந்த அகவையை அடைந்ததும் அம் மக்களுக்கு அரசன் கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்தான். அம் மக்களோ, கல்விகற்பதிற் சிறிதுங் கருத்துச் செலுத்தவில்லை. உடுப்பதும் உண்பதும் ஊர் சுற்றுவதுமாகப் பொழுது போக்கினார்கள். அறிவு சிறிதும் அற்றவர்களாகச் செயல்களைப் புரிந்தனர். தன் மக்கள் அறிவிலிகளாக விளங்குதலைக் கண்ட அரசன் பெருங் கவலைகொண்டான். எவ்வகையேனுந் தன் மக்களை அறிவுடையவர்களாகச் செய்தல்வேண்டும்என்று பெரிதும் முயன்றான்.

அரசன் தன் மக்களைப்பற்றி வருந்திக்கொண்டிருக்குங் காலத்தில் ஒருநாள் ஒரு பார்ப்பான் அரசனுடைய அவைக்கு வந்தான். அவனுடைய பெயர் சோமசன்மா. அவன் கல்வியறிவிற் சிறந்த பெரும்புலவன். அரசன் தன்னுடைய உள்ளக் கவலையைச் சோமசன்மாவுக்குத் தெரியப்படுத்தினான். அரசன் மொழிந்தவைகளைக் கேட்ட சோமசன்மா, 'மக்கள் எழுவரையும் தன்பால் ஒப்புவிப்பின் மிகுவிரைவிற் கல்வியறிவிற் சிறந்தவர்களாகச் செய்கிறேன்' என்றான். அரசன் உடனே தன் மக்களைச் சோமசன்மாவிடம் சேர்ப்பித்ததுடன் வேண்டிய உதவிகளையும் புரிந்தான்.

சோமசன்மா சூழ்ச்சியிற்சிறந்தவன். அரசனுடைய மக்களுக்குப் பல கிளைக்கதைகளமைந்த தொடர்கதை

யாக அவைகைச் சூழ்ச்சி (பஞ்சதந்திரம்) என்னும் கதையைத் தொடர்ந்து சொன்னான். அக் கதை சுவைமிக்கதாகவும் அறிவுவளர்ச்சிக்குப் பொருந்தியதாகவும் அமைந்திருந்தது. அதனைக் கேட்ட அரசன் மக்கள் நல்லறிவு பெற்றனர். 'சுவடிகளையெடுத்துப் படியோம்' என்று பிடிவாதங்கொண்டிருந்த அரசன் மக்கட்குச் சோமசன்மா கூறிய கதையைக் காதினால் கேட்க அளவில்லாத பெரும்பயன் உண்டாயிற்று. மேலும் மேலும் பலவற்றைக் கேட்டற்கு மன்னன் மக்கள் விரும்பினர். இருமைக்கும் நன்மை பயக்கும் அரும் பெருஞ் செய்திகள் நூல்களில் இருப்பதாகக் கூறிச் சோமசன்மா அவர்கட்குப் பல நூல்களையுங் கற்பித்தான். அதனால், நாளடைவில் அரசனுடைய மக்கள் எழுவரும் கல்வி கேள்விகளிற் சிறந்தவர்களாயினர். அறிவிற் சிறந்தவர்களாக மாறிய அவர்கட்குப் பிறகு அரியது ஒன்றும் இல்லையாக முடிந்தது. அரசன், சோமசன்மா தன் மக்களுக்குக் கதை கேட்டல் மூலமாகவே கல்விச் செல்வத்தை யளித்ததை யறிந்து, 'செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்' 'கற்றலிற் கேட்டலே நன்று' என்று பெரிதும் மகிழ்ந்தான். சோமசன்மாவுக்குத் தக்கவாறு பொருட்கொடை வழங்கிப் போற்றினான்.

> செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
> செல்வத்துள் எல்லாந் தலை.

**கேள்வி. செய். 1.**

(இ - ள்.) ஒருவனுக்குச் சிறப்புடைய செல்வமாவது, காதினால் கேட்கப் பெறுகிற கேள்விச் செல்வமேயாகும். அந்தக் கேள்வியறிவுச் செல்வமானது, பிற செல்வங்கள் எல்லாவற்றுள்ளும் தலைசிறந்ததாகும்.

## ௫. உண்மையுணர்ந்த தருமரும் ஓடிவூர்

பாண்டவர்கள் ஐவரும் வேத்திரகீயத்தில் தங்கியிருந்தார்கள். அப்பொழுது பகாசுரன் என்னும் அரக்கன் ஒருவன் காட்டிலே திரிந்தான், அவன் மக்களையும் மாக்களையும் கண்டவாறு கொன்று தின்று கொழுத்துத் திரிந்தான். அவனால் ஊர் காலியாகிக் கொண்டிருந்தது. வேத்திரகீயப் பார்ப்பனர்கள் பகாசுரனுடன் ஓர் உடன்பாடு செய்துகொண்டார்கள். வீட்டுக்கு வீடு ஒரு நாள் முறை. முறைவரப்பெற்றவர்கள் ஒருவண்டி சோறு; வண்டியிற் பூட்டப்பெற்ற மாடுகள்; ஓட்டிக்கொண்டு செல்லும் ஆள் ஆகியன பகாசுரனுக்கு ஒருநாள் உணவாகக் கொடுத்தல் வேண்டும்.

பாண்டவர்கள் தங்கியிருந்த வீட்டுப் பார்ப்பனரின் முறைநாள் வந்தது. பார்ப்பனி தன் மகனைப் பறி கொடுக்க வேண்டுமேயென்று வருந்தினாள். வீமனது ஆற்றலை யுணர்ந்திருந்த குந்தி வீமனை யனுப்பினால் பகாசுரனைக் கொன்று தொலைப்பான் என்று எண்ணினாள். பார்ப்பனியைப் பார்த்து, 'என் மக்கள் ஐவரில் ஒருவனைப் பகாசுரனுக்கு உணவாக அனுப்புகிறேன்' என்று கூறி வீமனை யனுப்பினாள். உணவு வண்டியை ஓட்டிக்கொண்டு சென்ற வீமன் வண்டி மாடுகளை அவிழ்த்துத் துரத்திவிட்டு உணவு முழுமையுந் தானே தின்று தீர்த்தான். வந்து எதிர்த்த பகாசுரனைக் கொன்று தொலைத்தான்.

வண்டிமாடுகளைக் கண்ட வேத்திரகீயத்தார் 'பகாசுரனுக்கு உணவு ஊட்டப்படவில்லைபோலிருக்கிறதே! பகாசுரன் வந்து யாது செய்யுமோ!' என்று அஞ்சி

ஞர்கள். ஊருக்குப் புறத்தில் வந்து அனைவரும் ஒன்று கூடிக் காட்டுவழியைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். உணவு முழுவதையும் உண்ட வீமன் பகாசுரனைப் போன்ற தோற்றத்துடன் ஊரை நோக்கி வந்துகொண்டிருந்தான். தொலைவிலே கண்டவர்கட்கு வருவது வீமன் என்று நன்கு தெரியவில்லை. பகாசுரன் என்றே எண்ணினார்கள். அனைவரும் ஓட்டம் பிடித்தார்கள். பாண்டவர்கள் நால்வருக்கு மட்டும் வருவது வீமன் தான் என்று ஐயமறத் தெரிந்தது. ஆயினும், ஊரார்கள் அஞ்சி ஓடுதலைக் கண்ட தருமர் தாமும் அவர்களுடன் சேர்ந்து விரைந்து ஓடினார். அருச்சுன நகுல சகாதேவர்களும் ஓடினார்கள். ஓடும்வழியில் அருச்சுனன் தருமரைப் பார்த்து, 'வருபவன் வீமன் என்று நமக்குத்தான் நன்கு தெரிகிறதே நாமும் ஏன் விரைந்து ஓடுதல் வேண்டும்? நாம் நின்றுவிடுவோம்' என்றான். தருமர் அர்ச்சுனனைப் பார்த்து, 'நின்றுவிடுவது சரியன்று; ஊரோடும்போது உடனோடவேண்டுமேயன்றி நின்றுவிடுதல் கூடாது. நாம் ஓடாமல் நின்றிருந்தால் மற்றவர்கள் நம்மை இகழ்ந்துரைப்பார்கள்' என்று கூறிக்கொண்டே மேலும் விரைந்து ஓடினார். உலகத்தார்கள் எவ்வாறு நடக்கிறார்களோ, அவ்வாறுதான் அனைவரும் நடக்கவேண்டுமென்பது அன்று தருமரிடம் நன்கு விளங்கியது.

எவ்வ துறைவ துலகம் உலகத்தோ(டு)
அவ்வ துறைவ தறிவு.

**அறிவுடைமை, செய். 6.**

(இ-ள்.) உலகமானது எவ்வாறு நடக்கின்றதோ, அவ்வாறு உலகத்தோடு பொருந்தித் தானும் நடப்பதே ஒருவனுக்கு நல்ல அறிவாகும்.

## ௯. துரியோதனன் மடமை

வீடுமர் துரோணர் முதலிய பெரியோர்கள் தருமர் துரியோதனன் முதலியோருடைய அறிவுத்திறனை ஆராய்ந்துபார்க்க விரும்பினர். தருமருக்கும் துரியோதனனுக்கும் ஆளுக்கு ஒவ்வொரு ரூபா கொடுத்தனர். ஒவ்வொரு வீடும் அளித்தனர். அவ் வீடுகள் வெவ்வேறு தெருக்களில் அமைந்திருந்தன. இருவரையும் பார்த்து, 'நாங்கள் நாளை இரவு உங்கள் வீடுகளுக்கு வருகிறோம். நீங்கள் உங்களுக்குக் கொடுத்துள்ள வீடுகளைப் பொருள்களால் நிரப்பிவைக்க வேண்டும்' என்று கட்டளையிட்டனர். அவர்களும் பெரியோர்கள் கூறியவற்றிற்கு இணங்கி ரூபாவைப் பெற்றுக் கொண்டு சென்றனர்.

துரியோதனனுடைய மூளை விரைந்து வேலைசெய்யத் தொடங்கியது. 'எந்தப்பொருள் மிக மலிவாக இருக்கிறது. எதை வாங்கினால் வீட்டை நிரப்பலாம்' என்று எண்ணமிட்டான். தன்னுடைய நண்பர்களைக் கலந்து ஆராய்ந்தான். 'வரகு வைக்கோல்தான் விலை மலிவானது. ஒரு ரூபாவுக்கும் வரகு வைக்கோலை வாங்கினால்தான் வீட்டை நிரப்பலாம். மற்றைப் பொருள்களை வாங்கினால் வீட்டை நிரப்பமுடியாது' என்று முடிவாகியது. ஒரு ரூபாவுக்கும் அவ்வைக் கோலை வாங்கிக்கொண்டுபோய் வீட்டை நிரப்பினான். தான் செய்துள்ள அரும்பெருஞ் செயல் தருமனுக்குந் தெரிந்து அவனும் இவ்வாறு வீட்டை நிரப்பிவிடக் கூடாதே என்பது துரியோதனனுக்கு மிகவும் கவலை. அதனால் தான் வீட்டை நிறைத்திருக்கும் உண்மை

தருமருக்குத் தெரிந்துவிடாமல் மிகவும் பாதுகாப்பாக இருந்தான்.

தருமரோ எட்டணாவிற்கு மெழுகுவத்தியும், எட்டணாவுக்கு வெற்றிலைபாக்குச் சந்தனம் முதலியவை களை வாங்கினார். இரவானதும் மெழுகுவத்தியைக் கொளுத்திவைத்து வீட்டை வெளிச்சமாக்கினார். பாக்கு வெற்றிலை சந்தனம் முதலியவைகளைத் தட்டில் வைத்துப் பாய் ஒன்றையும் விரித்தார். பெரியோர் களுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்.

வீடுமர் துரோணர் முதலியோர் இருவருடைய செயலையும் அறிவதற்காகப் புறப்பட்டனர். முதலில் துரியோதனனுடைய வீட்டிற்குச் சென்றனர். அங்கு நிற்கக்கூட இடமில்லாதபடியால் உடனே தருமருடைய வீட்டிற்குச் சென்றனர். தருமரின் செயல் மற்றவர்கட்கு மகிழ்ச்சியை உண்டாக்கிற்று. அனைவரும் தருமரைப் போற்றினர். தருமர் அறிவுடைமையால் எல்லாம் உடையவர் என்றும் துரியோதனன் அறிவின்மையால் யாதும் இல்லாதவன் என்றும் அன்று அறிஞர்கள் முடிவுசெய்தனர்.

அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்.

**அறிவுடைமை, செய். 10.**

(இ-ள்.) நல்ல அறிவினையுடையவர்கள் வேறொன்றும் இல்லாதவராயினும் எல்லாமுடையவராவார்; நல்லறிவினைப் பெற்றிராதவர்கள் எல்லாம் உடையவர்களாக இருந்தாலும், ஒன்றையும் பெற்றிராதவர்களேயாவர்.

## எ. மருதியின் மாண்பு

காவிரிப்பூம்பட்டினம் என்னும் கவின் மிகு மூதூரிலே முன்னாளில் மருதி என்னும் பெயருடைய பார்ப்பன மங்கை யொருத்தி வாழ்ந்திருந்தாள். அவள் தருமசீலன் என்னும் பெயருடைய பார்ப்பனனுடைய மனைவி. அவள் ஒரு நாள் காவிரியிலே நீராடி விட்டுத் தன்னுடைய இல்லத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள். அப்பொழுது சுகந்தன் என்னும் அரசனுடைய மகன் அவ்வழியே சென்றுகொண்டிருந்தான். அவன் மருதியைக் கண்டு, 'நீ யார்?' என்று கேட்டான்.

அரசனுடைய மகன் தன்னைக் கண்டு அவ்வாறு கேட்டதை உணர்ந்த மருதி உள்ளங் கலங்கினாள். நான் இவ்வாறு அரசகுமாரனுடைய உள்ளத்திற் சென்றபடியால், மிகுந்த தீவினையுடையவள் ஆயினேன். நான் இனி இறந்துவிடுதலே தகுதியென்று முடிவு செய்தாள். அந் நாளிற் காவிரிப்பூம்பட்டினத்தில் பூதசதுக்கம் என்றோர் இடம் இருந்தது. அரசர்களின் முயற்சியால் பூதம் ஒன்று அங்கு அமைந்து நின்றது. அப்பூதம் தவறு செய்தவர்களைத் தன்னுடைய கையிலுள்ள கயிற்றினை வீசிப் பற்றியிழுத்துக் கொன்று விடும். அத்தகைய பூதம் அமைந்திருந்த இடத்தை மருதி யடைந்தாள். 'ஓ பூதமே! நான் பிறனுடைய உள்ளத்திற் புகுந்த கொடியவள்! நீ என்னைக் கொன்று விடுவாயாக! குற்றத்தினையுடைய நான் இனி இவ்வுலகத்திலே இருத்தல் கூடாது' என்று கூறி வேண்டிக் கொண்டாள். பூதம் அவள் குற்றமற்றவள் என்று அறிந்து கொல்ல மறுத்துவிட்டது. அது மருதியைப் பார்த்து, 'நீ பெருந் தவறு ஒன்றுஞ் செய்யவில்லை. நீ

செய்தது சிறு தவறுதான். அத் தவற்றினால்தான் அரசனுடைய மகனின் உள்ளத்திற் சென்றாய். இனி அத்தகைய சிறிய தவற்றினையுஞ் செய்யாது இருப்பையானால், தூய்மையுடையவளாய்ப் பெருஞ் சிறப்பினை யடைவாய்' என்று கூறி அவளை அனுப்பிவிட்டது.

ஊரினர் மருதியின் செய்தியை உணர்ந்தனர்; ஒரு சிறிய குற்றத்தின் பொருட்டு உயிரைவிட முயன்ற மருதியின் மாண்பைப் பாராட்டினர். தினையளவாகிய குற்றம் நேரினும் மானம் மிக்கார் அதன் பொருட்டுப் பெரிதும் நாணி வருந்துவர் என்பதை உலகம் மருதி பால் உணர்ந்துகொண்டது.

> தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
> கொள்வர் பழிநாணு வார். குற்றங்கடிதல், செய். 3.

(இ - ள்.) பிறரால் இழித்துரைக்கப்படுதலாகிய பழிப்புக்கு வெட்கத்தினையடைபவர்கள் தம்மிடத்திலே தினையளவாகிய குற்றமானது உண்டாயிற்றாயினும், அக் குற்றத்தினைப் பனையளவினதாக எண்ணி வருந்துவார்கள்.

## ௮. இன்னல் அடைந்த இந்திரன்

தேவலோகத்தில் ஒரு நாள் இந்திரன் திருவோலக்கத்தில் இருந்தான். அப்பொழுது தேவமாதர்களின் ஆடல் பாடல்களும் பலவகைப் பொழுதுபோக்குக் காட்சிகளும் இனிது நிகழ்ந்தன. தேவர்கோன் கண்டு கேட்டுக் களிப்புக்கடலில் மூழ்கியிருந்தான். அப்போது தேவகுருவாகிய வியாழபகவான் பேரவைக்கு வந்தார். தேவாசிரியரைக் கண்ட தேவர்கோன் எழுந்து அவருக்குச் செய்யவேண்டிய வழிபாடுகளைச் செய்யவில்லை. களிப்புக்கடலில் மூழ்கியிருந்த இந்திரனுக்கு அறிவுக்-

கண்கள் குருடாயின. இந்திரன் போக்கு வியாழபகவா னுக்குப் பிடிக்கவில்லை. நம்மைப் பொருட்படுத்தாதவ னுடைய பேரவையில் நமக்கு என்ன வேலை என்று எண்ணினார். அவருக்கு வெகுளி மூண்டது. வந்த வழியே விரைவாகத் திரும்பிச்சென்றார்.

ஆசிரியரை அவமதித்த தேவர்கோன் செல்வப் பெருக்கம் சுருங்கத் தொடங்கியது. இந்திரன் அறிவுவரப்பெற்றான். ஆசிரியரைப் பலவிடங்களிலும் தேடிப் பார்த்தான்; கண்டுபிடிக்க முடியவில்லை. இறுதியில் ஒரு முடிவுக்கு வந்தான். விச்சுவவுருவன் என்பவனை ஆசிரியராக வைத்துக்கொண்டு தான் செய்யவேண்டிய வேலைகளைச் செய்து வந்தான்.

விச்சுவவுருவன் சூழ்ச்சி மிக்கவன். அவுணர்கட்கு நன்மையும், தேவர்கட்குத் தீமையும் உண்டாகுமாறு வேலைகள் செய்தான். அச்சூழ்ச்சி ஆயிரங்கண்ணனுக் குத் தெரிந்தது. அவன் வெகுண்டான். உடைவாளை உருவினான். ஆசிரியப் பெருந்தகையாக அமைந்து நின்ற விச்சுவவுருவனைக் கொன்று தொலைத்தான். ஆசிரியனைக் கொன்ற பழி விண்ணவர்கோனை நன் னியது; பலவாறு வருத்தியது. தேவர்கோன் செய்வ தறியாது திகைத்தான். பலவகை அல்லல்கட்கு உள் ளானான். பல பேருடைய பகையை ஒருங்கே கொள் ளுதலால் உண்டாகுங்கேட்டைவிடக் கொடியகேடுகள் அவனைச் சூழ்ந்தன. நல்லார் தொடர்பைக் கைவிடின் பெருந்தொல்லைகள் விளையுமென்பதை இந்திரன் உலகிற்குணர்த்தி நின்றான்.

பல்லார் பகைகொளலில் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

**பெரியாரைத் துணைக்கோடல். செய். 10.**

(இ - ள்.) ஒருவன் அறிவிற்சிறந்தவர்களுடைய தொடர்பைக் கைவிட்டிருத்தல், தான் தனித்தவனாக இருந்துகொண்டு பலபேருடைய பகைமையை மேற்கொள்ளுதலைப் பார்க்கினும், பத்துப் பங்கு மிகுதியாகிய தீமையை விளைப்பதாம்.

## ௧௰. சசிவர்ணன்

பல்லாண்டுகளுக்கு முன்பு சசிவர்ணன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் பார்ப்பன குலத்தைச் சேர்ந்தவன். பிறப்பில் உயர்ந்தவனாக விருந்தும் செய்யும் செயல்களில் மிகவும் இழிந்தவனாக விருந்தான். இழிஞர்களோடு கூடிக் கள் குடித்தான்; ஊன் உண்டான்; களவு செய்தான்; கொலை முதலிய கொடுந்தொழிலிலே ஈடுபட்டான்; நல்வினையாளர் குலத்தில் தோன்றிய அவன் தீவினைகளையே மிகுதியாகச் செய்தான். அவனுடைய உடலிற் கொடும் பிணிகள் பல குடிகொண்டன. வெட்டப்படுகின்றான் சசிவர்ணன் அந் நிலையை அடைதற்கு அவன் சேர்ந்திருந்த நண்பர்களின் கூட்டுறவே காரணமாக அமைந்து நின்றது. சசிவர்ணன் அடைந்த துன்பங்கள் எவராலும் இயம்புதற்கு அரியனவாகவிருந்தன. கொடியவனாகிய சசிவர்ணன் பொருட்டு எவரும் உள்ளம் இரங்கிலர். 'தீயோன் வினைப்பயனை நுகருகின்றான்; நன்கு நுகரட்டும்' என்று கூறி அகன்று சென்றனர்.

சசிவர்ணனுடைய தந்தை சசிவர்ணன் படும் அல்லலைக் கண்டு உள்ளம் உருகினான். சசிவர்ணனை நல்

வழிப்படுத்த வேண்டுமென்று எண்ணினான். பெற்ற மனம் பித்து அன்றோ? சசிவர்ணனை எவ்வகையி லேனும் நல்வழிப்படுத்த வேண்டுமென்று விரும்பி அவனைப் பல பெரியோர்களிடமும் அழைத்துக் கொண்டு சென்றான். அப் பெரியார்கள் சசிவர்ணன் புரிந்துள்ள தீமைகளை அறிவுக்கண் கொண்டு பார்த்து நாம் இத் தீயோனை ஊனக்கண்ணால் பார்ப்பதுகூட ஈனமாகுமென்று எண்ணி ஒதுக்கிவிட்டனர்.

இறுதியில் நந்திபராயணர் என்னும் பெரியார் ஒருவர் சசிவர்ணனை அன்புடன் ஏற்றுக்கொண்டார். சசிவர்ணன் சிற்றினஞ் சேராதவாறு அறிவுரைகள் வழங்கி அவனைத் தூய்மைப்படுத்தினார். சசிவர்ணன் சிற்றினஞ் சேர்தலை நீக்கிய அளவில் நல்லவனானான். அறிவு நூல்கள் பலவற்றை நந்திபராயணர் சசிவர்ண னுக்கு உரைத்தருளினார். மெய்யறிவு மறையையும் உரைத்தருளினார். சசிவர்ணன் நந்திபராயணருடைய சேர்க்கையால் மெய்யறிவிற் சிறந்தவனானான். அவ னுடைய தீவினைகளெல்லாம் அகன்றொழிந்தன. மிகு விரைவில் வீடுபேறடைதற்கு உரியவனாக விளங்கினான்.

சசிவர்ணனது தன்மையைக் கண்டோர், சசிவர் ணன் சிற்றினஞ் சேர்தலை யொழித்துப் பெரியவர்க ளுடைய கூட்டத்தைச் சேர்ந்தபடியால் சிறப்பை யடைந்தான் என்று கூறினர். சிற்றினஞ் சேர்தலின் சிறுமையும் பேரினஞ்சேர்தலின் பெருமையும் சசிவர் ணன்பால் நன்கு விளங்கின.

மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்.

சிற்றினஞ்சேராமை. செய். 5.

(இ-ள்.) ஒருவனுடைய உள்ளத்தூய்மையும் செய்யுஞ் செயல் தூய்மையும் ஆகிய இந்த இரண்டும் தான் சேர்ந்துள்ள கூட்டத்தின் தூய்மையைப் பற்றுக்கோடாகக் கொண்டு உண்டாகும்.

## ௧௦. எச்செயலாயினும் எண்ணிப்புரிக

ஒரு பார்ப்பனனுக்கும் அவன் மனைவிக்கும் பிள்ளைப் பேறு உண்டாகவில்லை. இருவரும் ஒரு கீரியை வளர்த்தனர். கீரிப்பிள்ளையை வளர்க்கத்தொடங்கிய பின் அவர்கட்கு ஒரு பிள்ளை பிறந்தது. ஒருநாள் பார்ப்பனி தன் பிள்ளைக்குக் கீரிப்பிள்ளையைக் காவல் வைத்துவிட்டுத் தான் தண்ணீர் கொண்டுவரச் சென்றாள். சிறிதுபோதுக்கெல்லாம் ஒரு நல்லபாம்பு தொட்டில்வழியாக மேலே இருந்து கீழே இறங்கிற்று. அதனைக் கண்ட கீரி பாம்பின்மேற் பாய்ந்து அதனைக் கடித்துக் கொன்றது. உடனே அது பார்ப்பனியை எதிர்நோக்கி ஓடியது. பார்ப்பனி ஓர் ஆத்திரக்காரி. அவள் கீரிப்பிள்ளை தன் பிள்ளையைக் கடித்துக் கொன்று விட்டது என்று தவறாக நினைத்துக்கொண்டாள். தண்ணீர்க்குடத்தைக் கீரிப்பிள்ளைமீது போட்டு உடைத்தாள். அதனாற் கீரிப்பிள்ளை மாண்டொழிந்தது. விரைந்து வீட்டிற்கோடிய பார்ப்பனி பாம்பு கடிபெற்று இறந்துகிடத்தலைக் கண்டு "அந்தோ! தீவினையாட்டியேன் இவ்வாறு கொடுஞ்செயல் புரிந்தேனே!" என்று வருந்திப் புலம்பினாள்.

II

ஒருவன் தன் நாய் ஒன்றை மற்றொருவனிடம் ஈடு வைத்து ரூபா ஐந்நூறு கடன் வாங்கியிருந்தான். நாள்கள் சில சென்றன. கள்ளர்கள் சிலர் நாயை ஈடுபெற்றிருந்தவனுடைய வீடுநோக்கிக் களவாடச் சென்றனர்.

நாய் குரைத்து எல்லோரையும் எழுப்பிவிட்டதுடன் கள்ளர்கள்மீது பாய்ந்து அவர்களைக் கடித்தும் துரத்தி விட்டது. நாயின்செயல் ஈடுபெற்றவனுக்கு மகிழ்ச்சியைவிளைத்தது. அவன் ஒரு நாளில், 'நாய், நேற்றிரவு என் வீட்டிற்குக் களவுசெய்தற்குவந்த கள்ளர்களைக் கடித்துத் துரத்தியதுடன் என்னையும்எழுப்பிவிட்டது. அதனுடைய இச் செய்கையால் என் செல்வம் களவு போகாமல் தப்பியது. நாய் செய்த இந்தப் பேருதவிக்காக நான் உனக்குக் கொடுத்த கடன் ரூபா ஐந்நூற்றையும் நன்கொடையாக்கிவிட்டேன். இனி நீ எனக்குக் கடன் கொடுக்க வேண்டியது இல்லை' என்று எழுதி நாயின் கழுத்தில் கட்டி அதன் பழைய தலைவனிடம் போகுமாறு குறிப்புக் காட்டினான். நாயும் அவ்வாறே சென்றது. கடன் பெற்றிருந்தவன் தன் நாயைக் கண்டான். இது அவனை ஏய்த்துவிட்டு வந்துவிட்டது என்று எண்ணிப் பெருஞ்சினங்கொண்டான். ஒரு குறுந்தடியை எடுத்து நாயின் மண்டையில் அடித்தான். நாய் இறந்தொழிந்தது. பிறகு சீட்டை அவிழ்த்துப் படித்துப் பார்த்தான். உண்மை புலனாகியது. 'அந்தோ! அருமைமிக்க நாயைக் கொன்றேனே!' என்று கூறிப் புலம்பி வருந்தினான்.

> எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
> எண்ணுவ மென்ப திழுக்கு.

**நெறிந்து செயல்வகை, செய். 7.**

(இ-ள்.) ஒருவர் தாம் செய்யுஞ் செயலினை, நன்றாக ஆராய்ந்து முடிவுசெய்து தொடங்குதல் வேண்டும். அவ்வாறன்றித் தொடங்கிய பின்னர் ஆராய்ந்துகொள்வோம் என்று நினைப்பது, குற்றத்தினை யுண்டாக்கும்.

## கக. கிளைவின் சூழ்ச்சி

கிளைவ் என்பவன் ஆங்கிலேயர்களுடைய ஆட்சி இந்திய நாட்டில் அமைதலுக்குக் காரணமாக நின்ற ஓர் ஆங்கிலேயன். சூழ்ச்சி செய்வதில் தேர்ச்சி பெற்றவன். அவன் ஒரு முறை முகம்மதியர் படையோனேடு போர் செய்வதற்காகத் தன்னுடைய படையுடன் புறப்பட்டுச் சென்றான். பகைவர்களின் படையை நெருங்கிப் பார்த்தான். பகைவர்களுடைய படை மிகப் பெரியதாக இருந்தது. மேலும், அவர்களிடம் புதிய போர்க்கருவிகளும் மிகுதியாக இருந்ததைக் கண்டான். நேருக்கு நேர் நின்று போர் செய்தால் தனக்குத் தோல்வி யேற்படுவது திண்ணம் என்பதையும் உணர்ந்தான். அந்தப் பெரிய படையை எவ்வாறு தோற்கடிக்கலாமென்று எண்ணமிட்டான்.

அண்மையில் மாமரங்கள் நெருங்கிய ஒரு மாந்தோப்பு இருந்தது. அந்த மாந்தோப்பைச் சூழ்ந்து மண்மேடும் இருந்தது. அத்தகைய பாதுகாப்பான இடத்திலே கிளைவ் தன்னுடைய படையைத் தங்குமாறு செய்தான். பிறகு தான் போருக்கு வந்துள்ள செய்தியை முகம்மதியர் படைத்தலைவனுக்குத் தெரியப்படுத்தினான். அப் படைத்தலைவன் எதனையும் ஆராய்ந்து பாராமல் விரைந்து போரைத் தொடங்கினான். முகம்மதியர் படைகளின் மறவர்கள் கிளைவின் படையினரைச் சுடு பொறியால் (துப்பாக்கியால்) சுட்டனர். கிளைவ் படையினரும் முகம்மதிய படையினரைச் சுட்டனர். கிளைவ் தன் படையை முன்னாராய்ச்சியோடு கூடிய சூழ்ச்சியால் மண்மேட்டால் சூழப்பெற்ற மாஞ்சோலையில் தங்கச் செய்திருந்தமை

யின் அவனுடைய படைக்கு அழிவு மிகுதியாக ஏற்படவில்லை. ஆனால், முகம்மதியர் படைக்கோ மிகுந்த அழிவு உண்டாயிற்று. அப்படை விரைவில் கிளைவினுடைய படைக்குத் தோற்றுப் புறங் காட்டியது.

அன்று கிளைவ் தன்னுடைய சிறு படையைக் கொண்டு பெரும்படைக்குத் தோல்வியை ஏற்படுத்திய தற்கு, அவனுடைய வலியறிதலாகிய செயலே உறு துணையாக நின்று உதவியது. கிளைவின் வலியறியும் சூழ்ச்சியை அவனுடைய பகைவர்களும் வியந்து போற்றினார்கள். முகம்மதியர் படை பெரியதாக விருந் தும்கூட யாதும் எண்ணிப் பாராமலும் எதிரிகளின் படையிருப்பைக் கருதாமலும் விரைந்து போரிலே புகுந்தமையால் புறங்காட்டியோட நேர்ந்தது. எனவே ஒவ்வொருவருக்கும் வலியறிதல் இன்றியமையாத செய லாகும்.

வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்.

**வலியறிதல், செய். 1.**

(இ - ள்.) பகைவர்களை வென்று புறங்காண எண்ணும் மன்ன னானவன் தான் முடிக்கத் தொடங்கியுள்ள செயலின் ஆற்றலையும், தன்னுடைய ஆற்றலையும், தன் பகைவனுடைய ஆற்றலையும், தனக்கும் தன் பகைவர்க்கும் துணை நிற்பாரது ஆற்றலையும் ஆராய்ந்து செய்தல் வேண்டும்.

## ௧௨. அடங்கியிருந்த ஐவர்

துரியோதனன் அடுத்தடுத்துப் பாண்டவர்கட்குத் தீமைகள் பல புரிந்தான். வீமனைத் தண்ணீரில் நாட்டப் பெற்ற கழுவில் கொலைசெய்ய முயன்றான். அரக்கு மாளிகை கட்டி ஐவரையும் அதில் கொன்று முடிக்கப் பார்த்தான். பாண்டவர்கட்குரிய நாட்டைப் பற்றிக் கொண்டு காட்டையளித்தான். வேறு பல அல்லல்களையும் ஐவர்கட்குச் செய்தான். தருமர் பொறுமையிற் பெரியவர். துரியோதனன் திரௌபதியைத் தன் தம்பி துச்சாதனனைக் கொண்டு துகிலுரியச் சொன்ன பொழுது ஐவருக்குஞ் சினத் தீ மிகுந்தது. தமது அறிவாற்றலால் தருமர் தமக்கு ஏற்பட்ட பெருஞ் சினத்தை ஒருவாறு மாற்றிக்கொண்டார். மற்றை நால்வருக்கும் அவ்வளவு பொறுமை இல்லை. அவர்கள் அன்றே துரியோதனனையும் அவனுடைய கூட்டத்தினரையும் அழித்தொழித்துவிட வேண்டுமென்று முடிவுசெய்தனர். வீமன் தன்னுடைய கதையின்மீது கையை வைத்தான். அருச்சுனன் தனது வில்லின் மீது கையைவைத்தான். மற்ற இருவர்களும் தத்தமக்குரிய படைக் கலங்கள்மீது கடைக்கண் பார்வையைச் செலுத்தினர்.

தம்பியர் இயல்பு தருமருக்குத் தெரியுமாகையால் அவர் அவர்கள்மீதே தமது நாட்டத்தைச் செலுத்தி நின்றார். அவர்களுடைய சினம் அளவைக் கடந்து விட்டதைக் கண்டார். இனிப் பேசாமலிருப்பின் அன்றே போர் மூண்டுவிடுமென்று உணர்ந்தார். அவர் தம்முடைய துணைவர்களைப் பார்த்து, 'இதுவரையில் எவ்வளவோ தீமைகளைப் பொறுத்து வந்தீர்கள். இன்னுஞ் சிறிது பொறுத்துக்கொள்ளுங்கள். பிறகு,

ஆவனை புரிந்துகொள்ளலாம். இப்போது நாம் வெகுண்டெழுதல் தக்கதன்று' என்று குறிப்பாகவுணர்த்தினார். துணைவர்களும் ஒருவாறு அடங்கியிருந்தனர்.

தருமர் அன்று வீமனையும் அருச்சுனனையும் அடக்கி மடக்காமல் அவர்கள் விருப்பம்போற் செய்யட்டுமென்று பேசாதிருந்திருப்பாராயின், துரியோதனனும் அவனுடைய துணைவர்களும் அன்றே அழிந்திருப்பர். பாரதப்போரும் நிகழ்ந்திராது. பாண்டவர்களும் பொறுமை யற்றவர்களென்று இழித்துரைக்கப்பட்டிருப்பர். தருமர் அன்று காலம்பார்த்து அடங்கியிருந்ததோடு துணைவர்களையும் அடக்கினின்றமையால் தான் பிறகு நேரிய முறையில் நின்றார் என்று பலராலும் போற்றப் பெறுஞ் சிறப்பினையடைந்தார்.

பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்பர் ஒள்ளி யவர்.

காலமறிதல், செய். 7.

(இ - ள்.) அறிவுமிக்குடையவர், தமக்கு ஒருவர் குற்றஞ் செய்தால் அப்பொழுதே, விரைவாக, வெளியிலே தம் சினத்தைக் காட்டமாட்டார்கள்; பகைவர்களை வெல்லுதற்குரிய காலத்தை யெதிர்பார்த்து, உள்ளே சினத்தை அடக்கிக்கொண்டிருப்பார்கள்.

## ௧௩. வீரபாண்டியக் கட்டபொம்மன்

பாஞ்சாலங்குறிச்சி என்னும் ஊர் பாண்டிமா நாட்டில் உள்ளது. அப் பாஞ்சாலங்குறிச்சி என்னுஞ் சிற்றூரை ஏறக்குறைய நூற்றைம்பது யாண்டு கட்குமுன் வீரபாண்டியக் கட்டபொம்மன் என்பவன் ஆட்சிபுரிந்திருந்தான். அவன் தோளாண்மையிலும் வாளாண்மையிலும் புகழ்மிகப் பெற்ற பேராண்மை யாளன். அந்தக் காலம் ஆங்கிலேயர் இந்தியநாட்டிற்கு வந்து சிறிது சிறிதாக நாட்டை அடிமைப்படுத்திய காலமாகும். சில செயல்களால் வீரபாண்டியக் கட்ட பொம்மனுக்கும் ஆங்கிலேயர்கட்கும் பகை நீண்டு இறுதியிற் போர் மூண்டது. ஆங்கிலேயரின் படை யொன்று புதிய போர்க் கருவிகளுடன் சென்று பாஞ் சாலங்குறிச்சியை வளைத்தது. பழைய போர்க்கருவிகள் சிலவற்றின் உதவிகொண்டே வீரபாண்டியக் கட்ட பொம்மன் வெள்ளையர்களை மிக எளிதாக விரட்டி யடித்தான்.

பிறகு பகை வளர்ந்தது. வீரபாண்டியக் கட்ட பொம்மனின் செயல்களை நடத்திநின்ற செயலாளன், திருச்சிக்குச் சென்று அங்கு அமர்ந்துள்ள ஆங்கிலேய ரிடத்திலே நிகழ்ந்தவைகளைக் கூறி முறைமை பொறலா மென்று மொழிந்தான். வீரபாண்டியக் கட்ட பொம்மன் முதலில் அவன் கூற்றுக்கு இணங்கவில்லை. மற்றவர்களும்கோட்டையைவிட்டு வெளிபோசென்றால் கேட்டையடைய நேரிடுமென்று கூறித் தடுத்தனர். செயலாளனோ அடுத்தடுத்துக் கட்டபொம்மனை வற்புறுத்தித் தொல்லைசெய்தான். அல்லல் பொறுக் காத கட்டபொம்மன் பாஞ்சாலங்குறிச்சியை விட்டுத்

திருச்சிக்குச் சென்று வெள்ளையரிடம் முறையிட இணங்கினான். சிறு குதிரைப்படையுடன் கட்டபொம்மன் பாஞ்சாலங்குறிச்சியை விட்டுப் புறப்பட்டான்.

கட்டபொம்மன் கோட்டையைவிட்டு வெளிப்பட்ட செய்தி நெல்லையிலிருந்த வெள்ளையர்கட்குத் தெரிந்தது. அவர்கள் ஒரு சிறு படையுடன் வீரபாண்டியக் கட்டபொம்மனை விரட்டினர். இடையே போர் நிகழ்ந்தது. வீரபாண்டியக் கட்டபொம்மன் பலரை வெட்டித் தள்ளி எட்டிப் போயினான். பிறகு புதுக்கோட்டையை அடைந்து அங்கே தங்கியிருந்த போது ஆங்கிலேயர் சென்று பற்றிக்கொண்டனர். பிறகு தக்கவாறு குற்ற உசாவல் புரியாமல் பேரளவுக்கு ஓர் உசாவலை நடத்தி விட்டு, வீரபாண்டியக் கட்டபொம்மனை ஓர் ஆங்கிலேயப் படைத்தலைவன் தூக்கிற் போட்டு உயிரைப் போக்கிவிட்டான்.

வீரபாண்டியக் கட்டபொம்மன், செயலாளன் கூற்றுக்கிணங்கிக் கோட்டையைவிட்டு வெளிப்பட்டதனால்தான் அவ்வாறு ஒழிய நேர்ந்தது. 'தன்னிலத்தினில் குறுமுயல் தந்தியின் வலிது' என்பவாகலின் ஒவ்வொருவருக்கும் தத்தமிடமே பாதுகாப்பாகும்.

நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற.

இடனறிதல், செய். 5.

(இ - ள்) முதலையானது ஆழமாருள்ள நீரிலிருக்குங்கால் மற்றைய உயிர்த்தொகைகளை வெற்றிகொள்ளும்; தன் வெற்றிக்குக்காரணமான தண்ணீரைவிட்டு அது நீங்குமானல், அதனைப் பிறவுயிர்கள் கொன்றுவிடும்.

## கச. துரியோதனன் ஐயம்

துரியோதனனுக்கும் பாண்டவர்கட்கும் போர் மூண்டது. துரியோதனன் அசுவத்தாமனையே தன் படைக்குத் தலைவனாக ஏற்படுத்துவதென்று முதலில் முடிவு செய்திருந்தான். அம் முடிவினையறிந்த கண்ணன் ஒரு சூழ்ச்சியைச் செய்தான். அச் சூழ்ச்சியே துரியோதனனுக்கு வீழ்ச்சியை விளைவிப்பதாயிற்று. நன்கு தெளிந்து போற்றியிருந்த அசுவத்தாமனைத் துரியோதனன் நம்பாதவாறு அச் சூழ்ச்சி அமைந்து நின்றதால் துரியோதனன் அசுவத்தாமன்மீது ஐயங் கொண்டான். அவ்வையம் நாளடைவில் பலப்பட்டதே தவிரக் குறையவில்லை. ஆகையால், துரியோதனன் தன் படைக்கு வீடுமர் துரோணர் கன்னன் ஆகியவர்களையே படைத்தலைவர்களாக ஏற்படுத்தினான். இறுதியில் பாண்டவர் பக்கம் வெற்றி கண்டது. துரியோதனன் பக்கம் தோல்வி கண்டது. துரியோதனன் தன் துணைவர்களுடன் அழிந்தொழிந்தான்.

கண்ணன் செய்த சூழ்ச்சியாவது :—கண்ணன் பாண்டவர் பொருட்டுத் துரியோதனனிடத்திற்குத் தூது சென்றார். பாம்புக்கொடியோன் அழிந்தொழி தலையே நோக்கமாகக்கொண்டு பாண்டவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி வரவில்லை. கண்ணன் துரியோதனன் அவைக்களத்தைவிட்டுப் புறப்பட்டார். வழியனுப்புவதற்கு அசுவத்தாமன் சிறிது தொலை உடன் சென்றான். கண்ணன் தன் கணையாழியைக் கழற்றி வேண்டுமென்றே கீழே போட்டார். அசுவத் தாமன் குனிந்து அவ்வாழியை எடுத்துக் கண்ணன் பால் கொடுத்தான். ஆழியை வாங்குமுன் கண்ணன்

விண்ணை நோக்கினார். அசுவத்தாமனும் விண்ணைப் பார்த்துவிட்டு ஆழியைக் கொடுத்தான். இந் நிகழ்ச்சியின் சூழ்ச்சி அசுவத்தாமனுக்கோ அல்லது பிறருக்கோ தெரியாது. அசுவத்தாமன் போரிற் பாண்டவர்கட்கே வெற்றிகிட்டத்தான் துணைநிற்பதாக மண்ணும் விண்ணும் அறிய அவைகளைப் பார்த்துக் கண்ணனிடம் உறுதிமொழியுரைத்ததாகத் துரியோதனன் எண்ணிக் கொண்டான். துரியோதனன் இவ்வாறு எண்ணிக் கொள்ள வேண்டுமென்னும் நோக்கத்துடன்தான் கண்ணன் அம் மாயக்கூத்தை நடித்து வெற்றிபெற்றார். துரியோதனன் உண்மையை உணராமல் அசுவத்தாமன் மீது ஐயங்கொண்டு அழிந்தொழிந்தான்.

தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்.

**தெரிந்துதெளிதல், செய். 10.**

*(இ-ள்) ஒருவனை நன்கு ஆராயாமல் உரிமையாளனாகத் தெரிந்துகொள்ளுந் தேர்வும், தெரிந்து எடுத்துக்கொள்ளப் பட்டவனிடத்திலே ஐயங்கொள்ளுதலும் அரசனுக்கு எக்காலத்தும் நீங்காத துன்பத்தினைத் தரும்.*

## ௧௫. மனந்திரிந்த கட்டியங்காரன்

ஏமாங்கதம் என்னும் பெயருடைய ஒருநாட்டிலே சச்சந்தன் என்னும் பெயருடைய ஓர் அரசன் அரசாட்சி செய்துகொண்டிருந்தான். அவனுக்கு அமைச்சனாக அமைந்தவன் பெயர் கட்டியங்காரன். அரசன் பலவாறு ஆராய்ந்த பின்னரே கட்டியங்காரனைத் தெளிந்து தனக்கு அமைச்சனாகக் கொண்டான். கட்டியங்காரனும் முதலில் நல்லவனாகத்தான் இருந்தான். ஆனால், அரச செல்வம் கட்டியங்காரனுடைய மனக்கட்டை

யுடைத்துவிட்டது. அரச செல்வத்தின் சிறப்பால் அவனுடைய உள்ளந் திரிந்துவிட்டது. அரசைக் கைப் பற்றுதற்குத் தக்க காலத்தை எதிர்பார்த்துக்கொண் டிருந்தான். அரசனோ கட்டியங்காரன்மீது ஐயங் கொள்ளவில்லை. அவனை முழுவதும் நம்பியிருந்தான். ஆகவே, அவன் அரசாட்சிப் பொறுப்புக்களைக் கட்டியங் காரனிடம் விட்டுவிட்டு இன்பப் பெருக்கிலேயே இனிது மூழ்கிக் கிடந்தான்.

அரச செல்வத்தை அடைதற்கு அற்றம் நோக்கிக் கொண்டிருந்த கட்டியங்காரன் தக்க சமயம் வந்து சேர்ந்ததென்று துணிந்தான். போருக் கெழுந்தான். அரசனைக் கொன்று நாட்டைக் கைப்பற்றிக்கொண் டான். சூலியாக இருந்த விசையை விண்ணூர்தி யொன்றில்வெளிப்பட்டு வேற்றிடஞ்சென்று சீவகனைப் பெற்றாள்.

எத்தகைய வழியால் ஆராய்ச்சிசெய்து ஒருவனை நல்லவனாகக் கண்டுபிடித்தாலும், அவன் சில சமயங் களில் மனந்திரிந்து தீயவனாக மாறிவிடுதலுங் கூடு மென்பதனைக் கட்டியங்காரன் திட்டமாகத் தெளிவு படுத்தி நின்றான்.

> எனைவகையால் தேறியக் கண்ணும் வினைவகையால்
> வேறாகும் மாந்தர் பலர்.

**தெரிந்துவினையாடல், செய். 4.**

(இ - ள்.) எல்லாவகையானும் ஆராய்ந்து தெரிந்தெடுக்கப் பெற்றவிடத்தும், தொழிலின் தன்மையினாலேயே உள்ளந்திரிந்து மாறுபாட்டையடையும் மனிதர்களும் பலர் இருக்கிறார்கள்.

## ௧௬. உடன்பிறந்தார் இருவர்

ஓர் ஊரில் உடன்பிறந்தார் இருவர் இருந்தனர். அவர்கள் தங்களுடைய முன்னோர் தேடிவைத்திருந்த பொருளைச் சமமாகப் பங்கிட்டுக்கொண்டனர். அவருள் இளையவன் ஊரில்தானே தங்கித் தன் செல்வத்தைப் பலவாறு பெருக்கிச் சிறப்பாக வாழ்ந்துகொண்டிருந்தான். மூத்தவனோ சிற்றூர் வாழ்க்கையால் சிறப்படைய முடியாது, பேரூர் வாழ்க்கைதான் பெருமையைக் கொடுக்கும். ஆதலால், பேரூர் சென்று சீரூர் வாழ்க்கையைத் தேடுவோமென்று எண்ணியவனாகித் தன் செல்வத்தையெடுத்துக்கொண்டு நகரமொன்றை அடைந்தான். எல்லாப் பொருள்களையும் ஒருங்கே முதலாக வைத்து வாணிகத் தொழிலில் ஈடுபட்டான். போதிய அளவு முன் பயிற்சி இன்மையாலும் பிறர் சூழ்ச்சி செய்துபொருளைக் கவர்ந்தபடியாலும் வணிகத் துறையில் அவனுக்கு ஊதியம் ஏற்படுவதற்குப் பதிலாகப் பொருளிழப்பே ஏற்பட்டது. அதனால் அவன் மிக விரைவில் எல்லாப் பொருள்களையும் இழந்தான். இறுதியில் இடையில் கட்டிய உடையே அவனுக்கு எஞ்சியது. இந்நிலையில் அவன் மிக வருந்தினான். அவனுக்கு இல்லாளும் இரு சிறுவர்களும் இருந்தனர். அவன் அவர்களை அழைத்துக்கொண்டு, தன் நண்பர்களாக வணிகத்துறையில் அவ்வூரில் அமைந்துநின்ற சிலரிடஞ் சென்றான். அவர்கள் முகங்கொடுத்துக் கூடப் பேசவில்லை. இவனுடன் பேசினால் உதவி செய்யுமாறு நேரிடுமே என்று எண்ணியவர்களாய், ஒரு பொருளுங் கொடாமல் அனுப்பிவிட்டனர்.

இறுதியில் மூத்தவன் தன் உடன்பிறந்தானிடம் சென்றான். அவனோ இவனைக் கண்டதும் இவனுடைய

நிலைமையை யுணர்ந்து வருந்தினான். 'என் அண்ணனுக்கு இந்நிலையும் ஏற்பட்டதே!' என்று இரங்கினான். அண்ணனையும் அவன் மனைவி மக்களையும் பெரிதும் போற்றி அவர்களுடைய சொல்வழி ஒழுகினான். அவர்கள் வேறெங்குஞ் சென்று விடாதவாறு பாதுகாத்துப் போற்றினான். செல்வப்பற்று அற்ற காலத்தினும் பழைய சுற்றமாந் தன்மையைப் பாராட்டுதல் உறவினர்களிடத்திலேதான் உள்ளதென்பதை அவன் அன்றுஉலகிற் குணர்த்தி நின்றான்.

பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

**சுற்றந்தழால், செய். 1**

(இ - ள்.) செல்வப்பற்றானது தொலைந்தபொழுதும். பழைய உறவு முறையினைக் கொண்டாடுதல், உறவினரிடத்திலேதான் இருக்கின்றது.

## கஎ. முழுமறதிப் பேராசிரியர்கள்

மேனாட்டிற் பல பேரறிஞர்கள், மறதியை மிகுதியும் உடையவர்களாக இருந்தமையின் பிறருடைய நகைப்புக்கும் இழிப்புக்கும் ஆளாகி வருந்தினார்கள். எடிசன் என்பவர் பல வியத்தகு பொறிகளைக் கண்டுபிடித்த நுண்ணுணர்வுடையவர். அவருடைய புகழ் உலகம் முழுவதும் பரவிநின்றது. எடிசன் பேரறிவும் மிகு புகழும் உடையவராயினும்மறதியும் அளவுகடந்து பொருந்தப்பெற்றவர். அவர் ஒருநாள் வரிப்பணங்கட்டுவதற்காக ஓர் அலுவலகத்திற்குச் சென்று, அங்கிருந்த அலுவலாளரிடம் பணத்தை யெடுத்துக் கொடுத்தார். பணத்தைப் பெற்றுக்கொண்டஅலுவலாளர் எடிசனைப் பார்த்து, 'உம்முடைய பெயர் யாது?' என்று கேட்

டார். மறதிமிகுந்த எடிசனுக்கு அவருடைய பெயரே மறந்து போய்விட்டது. எண்ணமிட்டுப் பார்த்தும் அறிந்துகொள்ள முடியவில்லை. தமக்கு வந்த கடிதங்கள் எவையேனும் சட்டைப் பையில் இருக்கின்றனவா என்று தேடிப்பார்த்தார்; ஒன்றும் அகப்படவில்லை. அப்பொழுது அங்கிருந்த ஒருவர், 'உம்முடைய பெயர் எடிசன்' என்று கூறினார். எடிசன் தம்முடைய பெயரையே மறந்துவிட்டதைக் கண்டு அங்கிருந்த பலரும் எடிசனை எள்ளி நகையாடினர்.

மற்றொரு பேராசிரியர் வெளியே போய்விட்டு வீட்டிற்கு வந்தார். வீடு தாழ்ப்பாள் போடப்பட்டிருந்தது. கதவைத் தட்டினார். வேலைக்காரன் உள்ளிருந்தபடியே 'ஆசிரியர் வீட்டில் இல்லை; பிறகு வாருங்கள்' என்று சொன்னான். அவனுடைய எண்ணம் யாரோ ஆசிரியரைப் பார்ப்பதற்காக வந்து தட்டுகிறார்கள் என்பதாகும். வேலைக்காரன் கூறியதைக் கேட்ட ஆசிரியர், 'சரி; அப்படியா? போய்விட்டு வருகிறேன்' என்று கூறிவிட்டுத் திரும்பினார். வேலைக்காரன் ஆசிரியர் குரலைக் கேட்டு ஓடிவந்து கதவைத் திறப்பதற்குள் அவர் திரும்பி தொலை சென்றுவிட்டார். வேலைக்காரன் ஓடிச்சென்று அவர்தாம் ஆசிரியர் என்று கூறி அழைத்துக்கொண்டு வந்தான். அவ்வாசிரியருடைய மறதியை அன்று கண்டவர்களும் இகழ்ந்து நகையாடினர். ஒவ்வொருவரும் மறதிக்கு இடங்கொடாமல் இருக்கவேண்டியது இன்றியமையாததாகும்.

பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
நிச்சம் நிரப்புக்கொன் றாங்கு.

**பொச்சாவாமை, செய்.2**

**(இ - ள்) ஒருவருடைய உணர்ச்சியை நாள்தோறும் ஏற்படும் வறுமையானது அழிக்கின்றாற்போல, ஒருவருக்கு ஏற்பட்டுள்ள மிகுந்த புகழினை மறதியானது அழித்துவிடும்.**

## ௧௮. மநுநீதிச் சோழனும் மங்கம்மாளும்

மநுநீதிச் சோழன் என்பவன் திருவாரூரிலிருந்து அரசு புரிந்துகொண்டிருந்தான். மநு என்பவர் கூறிய அறநூல் முறைப்படியே அவன் அரசு செய்ததனால் அவன் பெயர், 'மநுநீதிச் சோழன்' என்று வழங்கப் பெற்றது. அவன் மகன் ஒருநாள் தேரில் ஏறித் தெருவிலே சென்றான். அப்பொழுது ஓர் ஆன் கன்று துள்ளியோடி வந்தது. தேரின் உருளையில் அகப்பட்டு இறந்தொழிந்தது. அதனைக் கண்டு அரசிளங்குமரன் கலங்கினான். கன்றினையிழந்த ஆன் கதறி வருந்தியது. அது விரைந்து சென்று அரண்மனை வாயிலிற் கட்டப் பட்டிருந்த மணியினைத் தன் கொம்பால் அடித்தது. எந்நாளும் அடிக்கப்பெறாத மணி அடிக்கப்பட்டதைக் கேட்டு அரசன் நடுங்கினான். விரைந்து வெளியே வந்தான். கன்றினையிழந்த ஆவைக் கண்டான். அதற்கு நேர்ந்த துன்பம் யாது என்று ஆங்கிருந்தவர்களை வினவினான். நிகழ்ந்ததை யுணர்ந்தான். தன் மகன் என்று அரசன் சிறிதுங் கண்ணோட்டங் கொள்ளவில்லை. தன் மகனைத் தேருருளையில் அரைக்குமாறு அமைச்சனுக்கு ஆணையிட்டான். அமைச்சன் அவ்வாணையை நிறைவேற்ற அஞ்சித் தானே இறந்தொழிந்தான்.

உடனே அரசன் தன் மகனைத் தானே தேர் உருளையின் கீழ்க்கிடத்திக் கொலைசெய்யத் துணிந்தான். அமைச்சர்கள் அரசிளங்குமரன் அறியாது செய்த குற்றத்திற்குத் தக்க கழுவாய் செய்யலாம் என்றனர். அரசன் அதற்குச் சிறிதும் உடன்படாமல் தன் மகனைத் தானே தேர்க்காலின் கீழே கிடத்திக் கொலைக்குக் கொலை செய்தான் அவன் அன்று

ஓர்ந்து கண்ணோடாது முறை புரிந்ததால்தான் அவன் புகழ் இன்றும் உலகில் நிலைபெறுவதாயிற்று.

மங்கம்மாள் என்பவள் தென்னாட்டில் அரசாட்சி செய்திருந்த ஒரு மங்கையர்க்கரசி. அவள் தன்னுடைய தம்பியை ஒரு சிற்றரசனாக ஆக்கியிருந்தாள். அவன் தன் தமக்கை தான் பேரரசியாக விளங்குகிறாளே என்று ஒருமுறை பொறுக்கமுடியாத கொடிய குற்றமொன்றைப் புரிந்தான். அதனை யுணர்ந்து மங்கம்மாள் அவன் தன்னுடைய இனமவன் என்றுகூட எண்ணிப் பார்க்கவில்லை. கடுமையாக ஒறுத்தனள். அவள் இறைபுரிந்த மாட்சியோ அறிஞர்களால் இன்றும் புகழ்ந்து பேசப்பெறுகிறது.

> ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டும்
> தேர்ந்துசெய் வஃதே முறை.

செங்கோன்மை, செய். 1.

(இ - ள்.) தன்கீழ் வாழ்வார் செய்யுஞ் செயல்களை ஆராய்ந்து, யாவரிடத்தும், தண்ணளி புரியாமல், நடுவுநிலைமையை விரும்பி, குற்றத்திற்குரிய ஒறுத்தலை நன்காராய்ந்து செய்தலே முறைமையாகும்.

## ௫௰. கொடுஞ்செயல் புரிந்த நெடுஞ்செழியன்

நெடுஞ்செழியன் என்பவன் பாண்டிய மன்னர்களில் ஒருவன். அவன் அறநெறியிற் சிறிதும் பிறழாமல் மதுரைமாநகரிற் செங்கோல் செலுத்திக்கொண்டிருந்தான். அவனுடைய புகழ் எட்டுத் திசையிலும் ஏர் பெற இலங்குகின்றது. அவனுடைய செங்கோன்மையின் மாட்சியைப் பலரும் வியந்து போற்றி நின்றனர். காலமாறுபாட்டாலும் ஊழ்வினைப் போக்காலும் அவனுடைய செங்கோல் கொடுங்

கோளாக மாறத் தொடங்கியது. காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து கோவலன் கண்ணகியுடன் மதுரையை அடைந்தான். தன் மனைவி கண்ணகியினுடைய காற்சிலம்பொன்றை விற்க எண்ணினான். மதுரைத் தெருவிலே சென்றுகொண்டிருந்தான். கோவலனைப் பொற்கொல்லன் ஒருவன் கண்டான். அக் கொல்லன் அரசி கோப்பெருந்தேவியின் சிலம்பொன்றைச் சூழ்ச்சியாகக் களவாடியவன். அவன் தன் குற்றத்தைக் கோவலன் மேலே சுமத்தினான். அரசனிடம் சென்று அடாதமொழிகளைக் கூறினான்.

நெடுஞ்செழியன் செங்கோல் கோடாத சீர்த்தியுடையவனாக விருந்தும் ஊழ்வினையால் அறநெறி நீங்கி மறநெறியிற் புகுந்தான். அரச முறைப்படி செய்யவேண்டிய கடமைகளைச் செய்யத் தவறினான். கோவலனைத் தன் முன்பு அழைக்கவில்லை. கோவலன் மீது சுமத்தப்பட்ட குற்றம் பொய்யா மெய்யா என்பதை உசாவவில்லை. 'கோவலனைக் கொன்று விட்டுச் சிலம்பைக் கொண்டுவருக' என்று கட்டளை பிறப்பித்துவிட்டான். அரசனுடைய ஏவலாட்கள் கோவலன் தங்கியிருந்தவிடத்திற்குச் சென்று அவனைப் பார்த்தனர். அவன் கள்ளன் என்று அவர்களால் எண்ண முடியவில்லை. தட்டான் கூறிய குற்றத்தை அவர்கள் மறுத்துக்கூறி, 'இவன் களவு செய்தவனென்று சொல்லவும் முடியாது; கொல்லவும் முடியாது' என்று கூறினர். தட்டான் பல பொய்ம் மொழிகளை கூறிக், 'கள்ளன் இவ்வாறுதான் நல்லவன் போன்று அடக்க ஒடுக்கமாகக் காணப்படுவான். ஒன்றும் எண்ணாமல் கொன்று வீழ்த்துங்கள்' என்று வற்புறுத்திக் கூறினான்.

கொலைக்கு அஞ்சாத கீழ்மகன் ஒருவன் கோவலனை வெட்டி வீழ்த்தினான். கணவன் கொலை செய்யப்பட்ட செய்தி கண்ணகிக்குத் தெரிந்தது. அவள் நெடுஞ்செழியன் முன்பு சென்று தன் கணவன் கள்ளன் அல்லன் என்பதை மெய்ப்பித்துக்காட்டினாள். அவ்வளவில் நெடுஞ்செழியன் இறந்து தொலைந்தான். பலரும் போற்றுமாறு சிறந்து விளங்கியிருந்த அவனுடைய ஆட்சி முறைகொடியதால் வீழ்ச்சியடைந்தது. உலகம் உள்ளளவும் கெடாத பழியினையும் நெடுஞ்செழியன் அடைந்தான். சிறிய செங்கோலாட்சியால் அவன் முன்பு தேடியிருந்த கீர்த்தியும் அழிந்து தொலைந்தது. மன்னர்களுடைய புகழ் மன்னுதல் செங்கோலால் என்பதையும், அச்செங்கோல் கொடுங்கோலாயின் புகழ் அழியும் என்பதையும் உலகம் நெடுஞ்செழியனால் உணர்ந்தது.

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேல்
மன்னாவா மன்னர்க் கொளி.

கொடுங்கோன்மை. செய். 6.

(இ - ள்.) அரசர்க்குப் புகழ் நிலைபெற்று நிற்றல், அறநெறியினாலாகும்; அவ்வறநெறியில்லையானால் அரசர்க்குப் புகழ்கள் நிலைபெற்று நிற்கமாட்டா.

## ௨௦. கடுஞ்சினங் கொண்ட காவலன்

ஓர் அரசன் தன்னுடைய ஆட்சியின்கீழ் வாழும் மக்களிடத்தும், அமைச்சர் முதலிய அரசியற் சுற்றத்தினரிடத்தும் மிகுந்த அன்புடையவனாக இருந்தான். அவ்வரசனுக்கு அமைச்சர்கள் அறுவர் இருந்தனர். ஓரமைச்சன் வேறு சிலரோடு சேர்ந்துகொண்டு ஒருமுறை பெருங்குற்றம் ஒன்றைச் செய்துவிட்டான்.

அஃதாவது அரசனுடைய பொருட்காப்பாளர்களில் சிலரும் அமைச்சனும் சேர்ந்துகொண்டு பொய்க் கணக்கு ஏற்பாடு செய்துவிட்டு, பல்லாயிரம் பொற் காசுகளைக் களவுசெய்து தங்களுக்குள் பங்கு போட்டுக் கொண்டனர். பங்கு போடும்போது அவர்களுக்குள் கருத்து வேற்றுமை உண்டாய்விட்டது. அமைச்சன் தனக்குப் பங்கு மற்றவர்களைப் பார்க்கிலும் மிகுதியாக இருக்க வேண்டுமென்றான். மற்றவர்களோ, அதற்கு இணங்கவில்லை. அமைச்சன், தான் அமைச்சனாகையால் மற்றவர்களைப் பார்க்கிலும் மிகுதியாகப் பங்கு பெறுவதுதான் தக்கது என்றான். மற்றவர்களோ 'நாம் எல்லோரும் இப்போது களவில் ஈடுபட்டுக் கள்ளர் களாக இருக்கிறோம்; நமக்குள் உயர்வு தாழ்வு என்ன வந்துவிட்டது?' என்றார்கள். செயல் ஒழுங்காக முடிவு பெறவில்லை. அவர்கட்குள் ஏற்பட்ட போர் முற்றிவிட்டது. செய்தி அரசன் காதுகட்கு எட்டி விட்டது. அரசன் குற்றவாளிகளை மறைந்து உசாவி னான். எல்லோரும் குற்றவாளிகளென்றே முடிவாகி யது.

அரசன், அமைச்சனாக இருந்த குற்றவாளியையும் மற்றவர்களையும் பார்த்து, 'நீங்கள் செய்தது பெருந் தவறு. உங்களைக் கடுமையாக ஒறுக்காவிட்டால் மற்றவர்களும் இத்தகைய களவில் ஈடுபடுவார்கள். ஆகையால் உங்கள் அனைவரையுந் தூக்கிற் போட்டுக் கொல்லுமாறு முடிவு செய்திருக்கிறேன்' என்றான். அரசனுடைய முடிவைக் கேட்ட குற்றவாளிகள் அஞ்சி நடுங்கினார்கள். அந்தோ! பொருளுக்கு அவாக் கொண்டு உயிரை இழக்கும்படியாக நேர்ந்ததே என்று கலங்கினார் கள். மற்றைய அமைச்சர்களும் அந்தக் குற்றவாளிக

ளிடத்திலே அருள் காட்டவேண்டுமென்று பல்லைக் காட்டினார்கள். அரசனோ எதையும் கேட்கவில்லை.

குறிப்பிட்ட நாளில் குற்றவாளிகள் கொலைக்களத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். மற்ற அமைச்சர்களும் மக்களும் 'நம் அரசனைப் பிள்ளைப் பூச்சியாக நினைத்துக்கொண்டிருந்தோமே! அவன் தேளாக அல்லவா இருக்கின்றான்' என்று எண்ணினார்கள். தூக்கிற் போடுவதற்கு முன் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்து முடித்துவிட்டனர். இனி அந்தக் குற்றவாளிகள் தூக்கில் தொங்கவேண்டியதுதான் எஞ்சியது. குற்றவாளிகளின் உயிர் அச்சமிகுதியால் பாதிபோய் விட்டது. பாதிதான் இருந்தது. அரசன் அச்சமயத்தில் அங்கு வந்து, 'உங்களுடைய கொலைக் கட்டளையை மாற்றி ஒவ்வொருவருக்கும் ஆறு திங்கள் சிறைக் கட்டளை பிறப்பித்திருக்கிறேன்' என்று கூறினான். குற்றவாளிகள் கூற்றுவன் வாயிலிருந்து பிழைத்தோம் என்று மகிழ்ச்சியடைந்தனர்.

கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்.

வெருவந்தசெய்யாமை, செய். 2

(இ-ள்.) நெடுங்காலம், ஆக்கங்கள் தம்மை நீங்காமல் நிற்றலை விரும்புகிறவர்கள், குற்றஞ் செய்தாரை ஒறுக்கத் தொடங்கும்போது கடுமையாக ஒறுப்பவர்போலத் தொடங்கி, குற்றத்தின் அளவுக்குத் தக்கவாறு ஒறுக்க வேண்டும்.

## ௨௧. கண்ணமைந்த காவலனும் புண்ணமைந்த புரவலரும்

பாரி என்னும் மன்னன் பாண்டிநாட்டிலுள்ள பிரான்மலை என்னும் கொடுங்குன்றத்தில் அரசு செலுத்திக் கொண்டிருந்தான். அம்மன்னன் கொடை நலத்திற் சிறந்தவன். உயிர்கண் மாட்டுப் பேரருண்மிக்கவன். இயங்குதிணைப் பொருள்களிடத்தில் மட்டுமல்லாமல் மரஞ் செடி கொடிகளிடத்திற் கூடத் தண்ணளி புரிந்துநின்றான். ஒருமுறை தேர்மேற் சென்று கொண்டிருக்கும்போது வழியிலே ஒரு முல்லைக்கொடி தாவிப் படரக்கொழுகொம்பிலாததனிக்கொடியாகத் தளர்ந்து நின்றது. அக் கொடியைக் கண்ட பாரி இரக்கம் மிகுதியுங் கொண்டான். அக்கொடி இனிது படருமாறு அக் கொடியின் அண்மையிலே தன் தேரை நிறுத்தி விட்டுத் தான் கால் நடையாக நடந்து சென்றனன். அவனுடைய செயல் கண்டார்க்கு வியப்பையளித்தது. அந்நாளிலே இரவலர்க்குப் பொருளை வாரி வழங்குதலில் பாரிக்கு நேராக மாரியைத் தவிர வேறு எவரும் இலர். அவனுடைய கொடை நலத்தை அருணகிரி நாதர் முதலிய அருட்பெரியார்களும் பாராட்டியிருக்கின்றனர்.

பாரியின் கொடைநலம் சேர சோழ பாண்டியரென்னும் மூவேந்தருக்கும் பொறாமைத் தீயை மூட்டியது. அவர்கள் பாரியைப் போரில் வென்று தொலைக்க விரும்பினர். அவனுடைய கோட்டையைச் சூழ்ந்து வளைத்தனர். அறங் கடவுளின் அருளைப் பெற்ற பாரியை வெல்ல முடியவில்லை. வஞ்சனையாகக் கொன்று தொலைத்து வென்று செல்ல விழைந்தனர். இரவலர்

கோலத்தில் ஏகினர். தன்னையே தருமாறு பாரியை இரந்தனர். பாரி மன்னன் மறுக்கவில்லை. வேண்டுவதை ஈவாருணின்ற அப்பாரி தட்டாமல் தன்னையே கொடுத்துவிட்டான். மருள் மிகுந்த குருடர்களாகிய மன்னர்கள் மூவரும் பாரியின் உயிரை அழித்துச் சென்றனர். அருள் மிக்க அண்ணலை மூவேந்தரும் கொன்று தொலைத்ததைக் கண்ட மக்கள் பெரிதும் வருந்திப் புலம்பினர். மூவேந்தர்களையும் அருளற்ற கொடியவர்களென்று தூற்றினர். மூவேந்தர்களுடைய கண்களெல்லாம் புண்களாகவே இன்றும் மக்களால் எண்ணப்பெறுகின்றன.

கண்ணிற் கணிகலங் கண்ணோட்டம் அஃதின்றேல்
புண்ணென் றுணரப் படும்.

கண்ணோட்டம், செய். 5.

(இ-ள்.) ஒருவன் தன்னுடைய கண்ணிற்கு அணியத்தக்க அணிகலமாவது, உயிர்களிடத்தில் அருள் கொண்டு நடத்தலாம். அருளுடன் நடத்தலாகிய அது இல்லாவிட்டால், அவ்வாறு நடவாதவர்களுடைய கண் ஆனது புண்ணாக அறிவுடையோர்களால் மதிக்கப் பெறும்.

## ௨௨. இராவணனுடைய ஒற்றர்கள்

முன்னாள் மன்னர்களிடத்தில் ஒற்றர்கள் இருந்தனர். அவர்கள் நாடெங்கும் சென்று ஆங்காங்கு நிகழும் நிகழ்ச்சிகளைத் தம்மரசனுக்குத் தெரியப்படுத்தினர். ஓர் அரசன் மற்றோர் அரசன்மீது போருக்குச் செல்லத் தன் அமைச்சர்களோடு மறைமுகமாகக் கலந்தாராய்ந்தாலும் போதும். உடனே அச்செய்தி பகையரசர்கட்குத் தெரிந்துவிடும். பகைவரின் படைப்பலம்

முதலியவைகளை யறிந்து ஒற்றரை யனுப்புதல் இந் நாளிலும் மேனாடுகளில் உண்டு.

இராமர் குரங்குப் படைகளுடன் இலங்கையை யடைந்து தங்கியிருந்தார். இராவணன் இராமபிரானுடைய படையாற்றலையறிந்துகொள்வதற்கு எண்ணினான். சுகன், சாரன் என்னும் பெயர்களுடைய இரண்டு அரக்கர்களை ஒற்றர்களாக அனுப்பினான். அவர்களிருவரும் குரங்குவடிவங்கொண்டு இராமபிரானுடைய படையிற்புகுந்து படையின் அளவைப் பார்த்து உளவைத் தெரிந்துகொண்டு சுற்றித் திரிந்தனர். குரங்கு மன்னர்கள் அக் கள்ளர்களைச் சிறிதும் உணர்ந்துகொள்ளவில்லை. விபீடணன் அந்தக் கள்ளர்களை மெள்ளக் கண்டுகொண்டான். 'பாம்பறியும் பாம்பின்கால்' என்பதுபழமொழியல்லவா? விபீடணன் உடனே அவர்கள் அரக்கர் என்பதைக் குரங்குமன்னர்கட்குக் கூறினான். குரங்குமன்னர்கள் அக்கள்ளர்களைப் பிடித்து நன்கு புடைத்தனர். 'உண்மையை உரையுங்கள்' என்று பலவாறு வருத்தினர். அந்த அரக்கர்கள் எதற்கும் அஞ்சவுமில்லை; உண்மையை உரைக்கவுமில்லை.

பின்னர் இராமபிரானிடத்தில் அழைத்துச் சென்று உசாவினர். அங்கு அவர்கள் உண்மையைச் சிறிதும் உரைக்காமல் விபீடணன் இங்கு அனுப்பியது நம்மை வஞ்சகமாக வெல்லுதற்கே என்று விபீடணன் மீதே குற்றஞ் சுமத்தினர். பிறகு விபீடணன் அந்த அரக்கர்களின் குரங்குக் கோலத்தை மந்திரமொழி யாற்போக்கி அவர்களுடைய உண்மை யுருவத்தைத் வெளிப்படுத்திக் காட்டினான். அரக்க வடிவத்தோடு

நள்ளிரவாயிற்று. ஓரிடம் அண்மையில் வீடு வாசல்கள் இல்லாத இடமாக அமைந்திருந்தது. அந்த இடத்தில் வழிப்போக்கர்கள் பகலிற்கூட அஞ்சிக் கொண்டுதான் செல்வர். அவ்விடம் கள்ளர்கள் பதுங்கியிருப்பதற்கும் ஏற்றதாகவிருந்தது. தடியர்கள் அறுவரும் அவ்விடத்திற் சென்றுகொண்டிருக்கும்போது திடீரென்று இரண்டு கள்ளர்கள் எதிரேவந்து வழியை மறித்தனர். 'கையிலுள்ளதைக் கொடுத்துவிடுங்கள்' என்றனர்; வந்தவர்கள் இரண்டு பேர்களாகவும் வழிப் போக்கர்கள் ஆறுபேர்களாகவும் இருந்துங்கூடத் தடியர்கள் அந்தக் கள்ளர்களை எதிர்த்துத் தாக்க முயலவில்லை. மறுபேச்சுப் பேசாமல் கையிலிருந்த பொருள்களைக் கொடுத்துவிட்டனர். கள்ளர்களிருவரும் மிரட்டிய மிரட்டலிலேயே ஆறுபேரும் அஞ்சி நடுங்கி விட்டனர்.

ஒரு கள்ளன் மற்றவனைப் பார்த்துச், 'சும்மா விட்டு விட்டுப் போகக்கூடாது. போடு ஆளுக்கு இரண்டு வீதம் மண்டையில்' என்றான், தடியர்கள் அறுவரும் மூலைக்கொருவராகப் பிடித்தனர் ஓட்டம். பொருள்களைக் கைப்பற்றிக்கொண்ட கள்ளர்கள் சினமுற்று அந்தத் தடியர்களிற் சிலரைச் சிறிது தொலைவரை விரட்டி விட்டுத் தம் வழியே சென்றுவிட்டனர். கள்ளர்கள் சென்றுவிட்டார்களென்று கண்டபின் அறுவரும் ஒன்று கூடி, மற்றவர்கட்குப் போதிய ஆண்மையில்லாமையி ஞல்தான் பொருளை யிழக்கும்படியாக நேரிட்டதென்று சொற்போரிட்டுக்கொண்டு வந்த வழியே திரும்பி விட்டனர்.

முடியாதவாறு இந்தப் பித்துக்கொள்ளி தொல்லை செய்கிறதே! இஃது இறந்தொழியாதா!' என்று அவர்கள் எண்ணினர். தந்தை விரைவில் விண்ணுலகேகினன். 'சனி தொலைந்தது; இனி நம்முடைய மனம்போனவாறு இன்பவாழ்வு வாழலா'மென்று மகிழ்ந்தனர். வாணிகஞ் செய்யும் இடம், கைத்தொழிற்சாலை முதலிய இடங்கட்குத் தாங்கள் செல்லாமல் வீட்டிலேயே அமர்ந்து கொண்டு, எல்லாவற்றிற்கும் அலுவலாளர்களையே அனுப்பினர். தாம் உண்டு உறங்கிக் களித்திருந்தனர்.

அலுவலாளர்கள் பாடு கொண்டாட்டமாயிற்று. அவரவர்கட்கு அகப்பட்டதைச் சுற்றினர். மிக விரைவில் செல்வம் கரைந்துவிட்டது. தந்தை யிறந்த பிறகு மக்கள் செலவை மிகுதிப்படுத்தி யிருந்தனர். அதனாற் பொருட் பாதுகாப்பு நிலையம் (பாங்கி) முதலிய விடங்களில் இருந்த பெரும்பொருளும் அழிந்தொழிந்தது. நாளடைவிற் கடன் வளர்ந்தது. செல்வம் அழிந்து ஒழிதலைக்கண்டுகூடச் செல்வனுடைய மக்கள் முயற்சியில் ஈடுபடவில்லை. அவர்கள் மடிமிகுந்தவர்களாக இல்லத்தில்தானே வீழ்ந்துகிடந்தார்கள்.

சின்னாளில் வீடுவாசல் முதலியன கடன்காரர்களாற் கைப்பற்றப்பட்டன. வீடும் பறிபோன பின் குடியிருத்தற்கு இடமில்லாமற் றவித்தனர். அப்பொழுது தான் அவர்கட்கு அறிவு விளங்கியது. 'தந்தையின் உரைகளைக்கேட்டு அதன்படியே நடந்திருந்தால், இந்த நிலை வந்திராதே' என்று நொந்து வருந்தினர். ஆனால், பயன் யாது? பொய் சூது களவு முதலிய இழிதொழில்களிலே இறுதியில் இறங்கினார்கள். முயற்சியின்மையில் அழுந்திச் சிறந்த முயற்சி செய்யா

தவர்கள், நற்குடியைக் கெடுத்துப் பலவகைக் குற்றங் கட்கும் உள்ளாவார்கள் என்பதை உலகம் இவர்கள் பாற் கண்டுணர்ந்தது.

குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு.

மடியின்மை செய். 4.

(இ - ள்.) முயற்சியின்மையிலே பொருந்திச் சிறந்த முயற்சி செய்யாதவர்கட்குத் தாம் பிறந்த உயர்ந்த குடியானது அழிந்து, பலவகைக் குற்றங்களும் அவர்களிடத்திலே மிகுதிப்படும்.

## ௨௫. உடன்பிறந்தார் இருவர்

ஓர் ஊரிலே ஒரு பெருந் செல்வன் இருந்தான், அவனுக்கு மிகுதியான பொருள் இருந்தது. அவனுக்கு மைந்தர்கள் இருவர் இருந்தார்கள். செல்வர் இருந்த காலத்திலே அவர்கள் யாதொரு கவலையும் இன்றி உண்டு உடுத்திக் களிப்பாகப் பொழுதுபோக்கினார்கள். செல்வனுக்கு அகவை முதிர்ந்துவிட்டது. அவன் தனக்குப் பிறகு தன்னுடைய மக்களிருவரும் பகை கொள்ளாமல் இருத்தற்கு வேண்டியவைகளைப் புரிந்தான். தன்னுடைய செல்வத்தை இரண்டாகப் பங்கிட்டு இருவருக்கும் அளித்தான். வேண்டிய அறிவுரைகளைக் கூறிவிட்டு இறந்துபோனான்.

தந்தை இறந்தபிறகு மைந்தர்களிருவரும் தனித் தனியாகத் தங்களுடைய வாழ்க்கையைத் தொடங்கினார்கள். இளையவன் அல்லும்பகலும் வாணிகத்துறையிலே ஈடுபட்டுப் பொருளைப் பெருக்கினான். அதனால், அவனுடைய செல்வம் நாள்தோறும் பெருகிக்கொண்டிருந்தது.

மூத்தவானு எத்தகைய தொழிலிலும் ஈடுபட வில்லை. இல்லத்தில் இனிதமர்ந்து இன்பமாகப் பொழுது போக்கினுன். பலவகையாகச் செலவுகளைப் பெருக்கி அதனுல் தன்னுடைய செல்வம் விரைவில் அழிந்தொழி தற்கு வழி தேடிக்கொண்டான். 'நின்று தின்றுல் குன்றும் குறையும்' அன்ருே? மூத்தவன் தன்னுடைய செல்வத்தை விரைவில் அழித்துவிட்டு ஐயமேற்கத் தக்க நிலையை அடைந்தான்.

இத்தகைய சமயத்தில் இளையவன் தான் தன் னுடைய முன்னேனுக்கு உதவிசெய்ய வேண்டியவ னுனுன். சிறிதுநாள் உதவிசெய்தான். ஆனுல், தமய னுடைய அளவுகடந்த வீண் செலவுகளுக்கு அவனுற் பொருள்வழங்கமுடியவில்லை. நாளடைவில் தன்னுடைய உதவியை நிறுத்திக்கொண்டான். ஆகவே, மூத்தவன் மிகுந்த தொல்லையடைய வேண்டியவனுனுன். ஊரார் கள் உடன்பிறந்தார் இருவர்களுடைய நிலைமையையும் பார்த்தனர். 'மூத்தவன் எத்தகைய முயற்சியிலும் ஈடு படாமல் சோம்பேறியாகித் தன்னுடைய வாழ்வுக்குத் தாழ்வு தேடிக்கொண்டான்' என்று இகழ்ந்தனர். இளையவனுடைய ஊக்கத்தையும் பொருளீட்டும் நற் பண்பையும் பார்த்து அவனை மிகவும் புகழ்ந்தனர். முயற்சி செல்வத்தை யுண்டாக்கும் என்பதும் முயற்சி யின்மை வறுமையை உண்டாக்குமென்பதும் இவ் விருவர்பாலும் நன்கு காணப்பட்டது.

முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.

ஆள்வினையுடைமை, செய். 6.

(இ - ள்.) முயற்சியுடைமையானது ஒருவனுக்குச் செல்வப் பெருக்கினை மேன்மேலும் உண்டாக்கும். முயற்சியின்மையோ வறுமையை உண்டாக்கிவிடும்.

## உகூ. அல்லலுக்கஞ்சாத அரிச்சந்திரன்

அரிச்சந்திரன் கௌசிகருடைய செய்கையால் பல அல்லல்களை யடைந்தான். நாடு நகரங்களையிழந்தான். மனைவியை விலைப்படுத்தினான். தானும் புலையனுக்கு அடிமையாகிச் சுடுகாட்டிலே யிருந்து பிணஞ்சுடு தொழிலைச் செய்தான், தன் அருமை மகன் இறந்து இடுகாட்டிற்கு வந்தபோதும் அவன் உள்ளங் கவலவில்லை. தன் அருமை மனைவியை வெட்டும்படியாக நேர்ந்தபோதுகூட மகிழ்ச்சியுடன் வெட்டுதற்கு முற்பட்டான்.

உலகத்தினர் அரிச்சந்திரன் அடைந்த அல்லல்கள் பலவற்றையுங் கண்டு பேரிரக்கங் கொண்டனர். அரிச்சந்திரனுக்கு ஏற்பட்ட அல்லல்கள் எல்லாம் தமக்கு ஏற்பட்டதுபோலக் கலங்கினார். ஆனால், அரிச்சந்திரன் தான் அடைந்த துன்பங்கள் பலவாக மிகுந்த போதும் தன் கொள்கையினின்றுஞ் சிறிதும் மாறுபடவில்லை வருந்தவில்லை. அந்தத் துன்பங்களையெல்லாந் தனக்குண்டாக்கிய கௌசிகரை வெறுத்துச் சினந்துகொள்ளவில்லை. தொல்லைகளையெல்லாம் பொறுத்துக்கொண்டு எதற்குங் கலங்காமலிருந்தான். அரிச்சந்திரனுக்குத் தொடர்ச்சியாக அல்லல்களை உண்டாக்கிய கௌசிக முனிவர் தோற்றுப்போனார். அரிச்சந்திரனையடைந்த அல்லல்கள் தாமே துன்பப்பட்டு அரிச்சந்திரனைவிட்டு அகன்றுபோயின. அரிச்சந்திரன் பழமைபோல் பண்பு சிறக்கப்பெற்றான். அரிசந்திரன் துன்பங்களை

யெதிர்த்து அத் துன்பங்களே துன்பப்படுமாறு செய்த மையை உலகம் இன்றும் வியந்து போற்றுகின்றது.

அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்கண் இடுக்கட் படும்.

இடுக்கணழியாமை. செய்.5.

(இ - ள்.) இடைவிடாது மேலும் மேலும் தொடர்ந்து வந்தன வாயினும், தன் கொள்கையினின்றும் மாறுபடாதவன் அடைந்த துன்பமானது தானே துன்பத்தையடையும்.

## உஎ. அரிமஞ்சு அமைச்சனின் அரைகுறைச் செயல்

அரிமஞ்சு என்பவன் வித்தியாதர வுலகத்தை யாண்டுகொண்டிருந்த அச்சுவக்கிரீவன் என்பவ னுடைய முதலமைச்சன். மிகுந்த அறிவும் சூழ்ச்சித் திறமும் அமையப்பெற்றவன். ஆனால், எடுத்த செயலைத் திறம்பட முடிக்கும் ஆற்றல் அவனிடம் இல்லை. இரத நூபுரமன்னன் சுவலனசடி என்பான் மகள் சுயம் பிரபைக்கும் போதனமாபுரத்து அரசன் பயாபதி மன்னன் மகன் திவிட்டனுக்குந் திருமணம் நடைபெற ஏற்பாடாகியது. அச்சுவக்கிரீவன் அதனையறிந்து கறுஞ் சினங்கொண்டான். பயாபதி மன்னனோடு போர் தொடங்க எண்ணினன். அரிமஞ்சு அச்சுவக்கிரீவனைத் தடுத்து, ‘அந்தப் பயாபதி மன்னன் தன்மையை நன்கு ஆராய்ந்து அறிந்துகொண்டு அதற்குத் தக்கவாறு செய்யலாம்’ என்று கூறினன்.

முதலில் ‘திறைவாங்கி வருக’ என்று கூறித் தூதர் களை யனுப்பினன். பயாபதி மன்னன் மகன் திவிட்டன் பயாபதிமன்னன்கொடுத்ததிறைப்பொருளைப்பறித்துக்

கொண்டு விரட்டிவிட்டான் என்று உணர்ந்தான். அச்சுவக்கிரீவனுக்குத் தெரிவிக்காமலே இந்தப் பகையைத் தொலைக்கவேண்டுமென்று முடிவுசெய்தான். அரிகேது என்பவனை மாயச் சீயமாகச் சுரமைநாட்டுக்கு அனுப்பினான். திவிட்டன் மாயச்சீயம் வந்துள்ள செய்தியையறிந்து காட்டிற்குச் சென்றான். ஓர் உண்மைச் சிங்கத்தைப் பிடித்துக் கொன்றுபோட்டான். செய்தியை உணர்ந்த அரிமஞ்சு மேற்கொண்டு திறமையாகச் செயல் புரியவில்லை. அச்சுவக்கிரீவனுக்குச் செய்தியைக் கூறிவிட்டான். பயாபதி மன்னன்மீது போருக்கெழுந்தான். திவிட்டன் கையால் இறந்து மடிந்தான் வித்தியாதர வுலகம் முழுவதும் திவிட்டனுடைய மாமனாகிய சுவலனசடியின் ஆளுகைக்குள் அமைந்துவிட்டது. அரிமஞ்சு அமைச்சன் முறைமையாகவே ஆராய்ந்து செயல்புரிந்து நின்றானாயினும் போதிய திறமைப்பாட்டுடன் வினையாண்மையைப் புரியவில்லையாகையால் தன்னரசனையும் அழியச்செய்து தானும் மறைந்தொழிந்தான்.

முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர்.

அமைச்சு, செய், 10.

(இ - ள்.) செய்யவேண்டிய செயல்களை முடித்தற்கேற்ற திறமையில்லாதவர்கள், ஒழுங்காகவே எண்ணியிருந்தாலும், செய்யும்பொழுது அச்செயல்கள்முடியாதவாறுதான்செய்வார்கள்.

## ௨௮. சொல்வன்மையற்ற புலவர்

சென்னையிற் பல்லாண்டுகட்கு முன்னர் ஒரு செந்தமிழ்ப்புலவர் இருந்தார். அவர் பல நூல்களை ஐயமறக் கற்றிருந்தார். அவர் பயின்ற நூல்களுக்கு கணக்கு வழக்கில்லை. நூலை மிகுதியாகப் படித்தாரேயன்றி அவருடைய கல்வியறிவாற் பிறருக்கு எவ்விதமான பயனும் ஏற்படவில்லை. ஒரு செய்யுளைப் படித்துப் பொருள் சொல்லுமாறு கூறினால் அவரால் இயலாது அவர் படித்தது அவரளவுக்கே அமைந்திருந்தது. ஏதேனும் சொல்லச்சொன்னால் நூலைப்பார்த்து அதிலுள்ளபடி படிப்பார். அதனை விரித்துரைக்கச் சொன்னால் தெரியாது. அவருக்கு விளங்குமே தவிர வெளியே கூற இயலாது. அதனால், அவருடைய படிப்பு ஊமைகண்ட கனவாகவிருந்தது. தான் படித்ததைப் பிறருக்குச் சொல்லவேண்டுமென்று அவருக்கும் விருப்பந்தான். சொல்வன்மையில்லாததுதான் குறையாகவிருந்தது. அவர் பெரிய புலவராயிற்றே! ஏதேனும் நல்லுரைகள் கேட்கலாமென்று சிலர் அவருடைய இல்லத்திற்குச் சென்றால், 'இப்பொழுது எனக்கு நேரம் இல்லை; இன்னொரு நாளைக்கு வாருங்கள் ஏதேனும் படித்துச் சொல்லுகிறேன்' என்று தட்டிக்கழித்து விடுவார்.

அப் புலவரிடம் கல்வியறிவு அமைந்திருந்தும் சொல்லாற்றல் அமையாதபடியால் அவரை யாரும் ஒரு பொருட்படுத்துவதில்லை. ஒரு நாள் பலர் கூடிய இடத்தில் பொதுவான அறிவுடைய ஒருவர் ஏதோ ஒரு பாட்டைத் தப்புந்தவறுமாகக் கூறி அதன் பொருளைத் தம்மனம்போனவாறு விரித்துரைத்துச் சொற்பொழிவு

செய்யத் தொடங்கிவிட்டார். பாட்டின்பொருள் முற்றிலுந் தவறாக இருந்தது. அவ்விடத்திற் புலவரும் அமர்ந்திருந்தார். அப் பாட்டுக்கு உரை பொருத்தமில்லாதிருத்தலைக் கண்ட சிலர் புலவரைப் பார்த்து, 'அவர் கூறும் பொருள் தகுதியாய்ந்ததுதானா?' என்று கேட்டனர். புலவர், 'மிகத் தப்புந்தவறுமாக இருக்கிற' தென்று கூறினார். ஒருவர் புலவரைப் பார்த்துத் 'தாங்கள் அப்பாட்டின் பொருளைக்கூறி விளக்குங்கள்' என்றுகேட்டார். புலவருக்கு அப் பாட்டின் பொருள் நன்கு விளங்குகிறதேதவிர, வெளியே கூறமுடியவில்லை. புலவரின் நிலைமையைக் கண்டோர், 'ஒன்றுமே கூற முடியாத தங்களைப்பார்க்கிலும் ஏதோ தெரிந்ததைக் கூறும் அவருடைய நிலைமை அப்படி ஒன்றும் இழிந்த தன்று' என்று கூறினார். புலவர் மிகவும் வருந்திக் கொண்டார். அவருடைய கல்வியறிவால் அவருக்கும் பிறருக்கும் எட்டுணைப் பயனும் இல்லாதொழிந்தது.

இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.

**சொல்வன்மை, செய். 10.**

**(இ-ள்.)** தாம் கற்ற நூல்களைப் பிறர் அறியுமாறு விரித்துச் சொல்லும் ஆற்றல் அற்றவர்கள், கொத்தினிடத்தே மலர்ந்திருந்தாலும் மணமில்லாத பூவைப் போன்றவர்களாவர்.

## உ௯. தீவினைக்கிணங்காச் செம்மையாளர்கள்

சோமநாதபுரம் என்னும் ஊரிலே ஒருமுறை பஞ்சம் உண்டாகியது. மக்கள் பலவாறு அல்லலுக்கு ஆளானார்கள். பஞ்சம் நெடுநாள் நீடித்திருந்தது. பட்டினியால் வாடிய மக்கள் எத்தகைய தீவினைகளையும் செய்யத் துணிந்தார்கள். அவர்கள் பாதைகளின் மறைவிடங்களிலே இருந்து வழிப்போக்கர்களின் கையிலுள்ள பொருள்களைப் பறித்துக்கொண்டு சென்று உண்டு காலந்தள்ளவுந் தொடங்கினார்கள்.

அந்தச் சோமநாதபுரத்திலே சில சான்றோர்கள் இருந்தார்கள். அவர்கள் வழிப்பறி முதலிய தீயவழிகளிலே சென்று பொருள் தேடி உயிர்வாழ்ந்திருத்தலை விரும்பவில்லை. அவர்கள் பல தினங்கள் பட்டினி கிடந்தார்கள். அதனால், அவர்களுடைய உடல் மிகவும் இளைத்துத் துரும்பாகப் போய்விட்டது. அவர்கள் எழுந்து நடமாடவும் ஆற்றலற்றவர்களானார்கள்.

வழிப்பறியினாலும் கொள்ளை முதலியவற்றாலும் பொருள்தேடி ஒருவாறு காலங்கடத்திய சிலர், பட்டினி கிடந்து வாடும்பெரியோர்களுடைய நிலைமையை அறிந்தார்கள். சில உணவுப்பொருள்களை அவர்களிடம் எடுத்துச்சென்று இதனைப்பெற்றுஉண்ணுங்கள் என்று கூறிக் கொடுத்தார்கள். பட்டினிகிடந்த பெரியோர்கள், 'இவ் வுணவுப்பொருள் உங்களுக்கு எவ்வாறு கிடைத்தது?' என்று உசாவினார்கள். வழிப்பறியாலும் களவாலும் அப்பொருளைத் தேடியோர்,அப்பெரியோர்களிடம் பொய்யுரைத்தல் கூடாது என்று உண்மையை உரைத்தார்கள். அவ்வளவில் அப் பெரியோர்கள், 'நன்மையும் புகழும் உண்டாகாத வழியிலேபொருளைத்

தேடுதல் கூடாது. தீயவழிகளிலே தேடும் பொருள்கள் நமக்குத் தீமையை உண்டாக்கும். ஆகையால், எங்களுக்கு இவைகள் வேண்டாம். இவைகளை நீங்களே எடுத்துக் கொண்டு செல்லுங்கள்' என்று கண்டித்துரைத்து விட்டார்கள்.

தீயவழியிற் பொருள் தேடியோர் எவ்வளவோ வற்புறுத்திக் கூறியும் அப்பெரியோர்கள் இணங்க வில்லை. பிறகு சில காலத்திலே பஞ்சம் ஒழிந்து வானம் தெளிந்தது. மக்கள் துன்பம் நீங்கி இன்பம் அடைந்தார்கள். பட்டினியால் வாடிய பெரியோர்களும் பிழைத்துக்கொண்டார்கள். மக்கள் தீயவழியால் பொருள் தேடிப் பிழைத்த சிறுமையாளர்களை இகழ்ந்தார்கள். அவர்களிடமிருந்து பொருளைப் பெற்றுக்கொள்ள மறுத்த பெரியோர்களின் பெருமையைப் புகழ்ந்து பேசினார்கள். புகழும் நன்மையும் தராத செயல்களை எக்காலத்திலும் செய்தல் கூடாது என்பதை உலகம் அந்தப் பெரியோர்களால் உணர்ந்தது.

என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

**வினைத்தூய்மை, குறள், 2.**

**(இ-ள்.)** புகழும் நன்மையும் பயவாத செயல்களை ஒருவன் எந்தக் காலத்திலும் செய்யாது நீக்குதல் வேண்டும்.

## ௰. கர்ணன் வீணுரை

பாரதப்போர் நடந்துகொண்டிருந்தது. துரியோதனன் பக்கத்திற்குத் தோல்விமேல் தோல்வியாக ஏற்பட்டுக்கொண்டிருந்தது. பாண்டவர் பக்கத்திற்கோ வெற்றிமேல் வெற்றியாக ஏற்பட்டுக்கொண்டிருந்தது. துரியோதனன் அடிக்கடி தன் நண்பனுகிய கர்ணனிடஞ் சென்று தனக்கு ஏற்படுந் தோல்விகளை யெல்லாஞ் சொல்லி வருந்திஞன்.

கர்ணனே துரியோதனனைப் பார்த்து, 'நண்பா! இன்னுஞ் சிறிது பொறுத்துக்கொள். நான் அருச்சுனனைக் கொன்று உனக்கே அரசாட்சியை உரிமைப் படுத்துகிறேன். இதுபற்றி நீ சிறிதும் ஐயப்படுதல் வேண்டாம்; நான் வில்லைத் தூக்கிக்கொண்டு போருக்கு எழுந்துவிட்டால் என்னை வெற்றி கொள்பவர்களும் இவ்வுலகில் இருக்கிறுர்களோ? என்னிடம் இந்திரன் அளித்த வேற்படை இருக்கிறது; பாம்புக்கணை இருக்கிறது. எனக்கு ஒப்பான போராண்மை படைத்தவர்கள் இவ்வுலகிலே யாரும் இல்லை. பாண்டவர்களைத் தோற்கடிப்பது ஒரு பெருஞ் செயலன்று. ஆகையால் தான் எதையும் ஒரு பொருட்படுத்தாமல் இருக்கிறேன்' என்று அடிக்கடி தற்புகழ்ச்சியாகவே பேசிக்கொண்டிருந்தான்.

அருச்சுனன் எதிர்த்துப் போர் செய்யத் தொடங்கிஞலோ சிறிது போதுக்குள் அஞ்சிப் புறங்காட்டி மிகு விரைவாக ஓடிப்போவான். கர்ணன் பாரதப்போர் முடிவதற்குள் அருச்சுனனிடம் பலமுறைதோற்ருேடிப் போஞன். எனினும் தன் ஆற்றலை வியந்து அடிக்கடி பெருமையாகப் பேசிக்கொள்வதிலோ குறைவில்லை.

சல்லியன், கிருபாச்சாரி முதலியோர், கர்ணன் வெறும் வாய்ப்பேச்சாளன் என்றும் சொல்லுவதையல்லாமல் வேறொன்றும் செய்யா இயலாதவன் என்றும் இகழ்ந்துரைத்தார்கள். இறுதியில் அர்ச்சுனனை வெல்ல முடியாமல் அவன் கையாலேயே இறந்துபோனான். வாயினாற் பேசுவது மிக எளிதுதான்; ஆனால் பேசிய வாறு செயலிற் காட்டுவதோ மிகவும் அருமையாகும்.

சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணஞ் செயல்.

விவேகசிந்தாமணி... 

**விநாத்திட்பம், செய். 4.**

(இ - ள்.) இதனை முடித்தல் எளிதாமென்று வாயினாலே சொல்லுதல், எவர்க்கும் மிக எளிமையான செயலாம்; இச்செயலை இனிது முடிப்போமென்று சொல்லியவாறு செய்தல், மிக அருமையான செயல்களாக இருக்கும்.

## ௧௧. பகைவரை நட்பாக்கிய அரசன்

ஒரு காலத்தில் பாண்டிய மன்னன் ஒருவனுக்குப் பகைவர்கள் பலர் ஏற்பட்டார்கள். சோழ மன்னர்களும் சிற்றரசர்கள் பலரும் பாண்டியனுக்குப் பகைவர்களாக விருந்தார்கள். பாண்டியன் பலரையும் பகைத்துக்கொண்டிருந்ததைச் சேரமன்னன் ஒருவன் அறிந்தான். அவனிடத்திலே படைமிகுதியாக விருந்தது. அவன் நாம் இந்தச் சமயம் பாண்டியன்மீது போருக்குச் செல்வோமானால் பாண்டியனை எளிதாகத் தோற்கடித்துப் பாண்டி நாட்டைப் பிடித்துக்கொள்ளலாமென்று முடிவுசெய்தான். பெரும் படையுடன் புறப்பட்டுப் பாண்டி நாட்டை நோக்கி வந்துகொண்டிருந்தான்.

சேரன் தன்மீது போருக்குவருஞ் செய்தி பாண்டிய மன்னனுக்குத் தெரிந்தது. நாம் இப்போது செய்யத் தக்கது யாது என்று எண்ணமிட்டான். நம்முடைய பகைவர்களாக வுள்ளவர்களையெல்லாம் முதற்கண் நண்பர்களாகச் செய்துகொள்ளுதல் வேண்டும் என்று முடிவுசெய்தான். தன்பகையரசர்களையெல்லாம் அடுத்துப் பல இன்னுரைகளை இயம்பினான். 'நாம் என்றும் நட்புரிமையோடு விளங்குவோம். உங்கட்கு ஆக வேண்டியவைகளை யெல்லாம் நான் எப்பொழுதும் உரிமையோடு புரிவேன். நீங்கள் இந்தச் சமயத்தில் என்னைக் கைவிடாமல் எனக்குத் தகுந்த உதவிபுரிதல் வேண்டும்' என்று மிகுந்த பணிவுடன் வேண்டிக் கொண்டான்.

பாண்டியனுடைய வேண்டுகோளை அவனுடைய பகையரசர்களால் மறுக்க முடியவில்லை. நம் எதிரி நம்மிடம் வந்து பணிவுடன் மன்றாடுகின்றானே யாது செய்வதென்று எண்ணினார்கள். தாங்கள் அவனுக்குத் துணை நிற்பதாக உறுதியும் கூறினார்கள். படைகளைத் திரட்டிக்கொண்டு துணையும் புறப்பட்டார்கள்.

பாண்டியனுடைய பகையரசர்கள் அவனுக்கு நண்பர்களாகிப் படையுடன் துணை வருகிறார்கள் என்னுஞ் செய்தி சேரனுக்குத் தெரிந்தது. அவன் 'அந்தோ! நம் எண்ணம் நிறைவேறமாட்டாது போலிருக்கிறதே என் செய்வது' என்று ஏங்கிக்கொண்டிருந்தான். பாண்டியனுக்குத் துணைவந்துள்ள துணைப் படையின் பெருக்கைக் கண்டான். நாம் பாண்டியனை யெதிர்த்துப் பின்புறங்காட்டியோடும்படியாக நேரிடும்; அவனிடஞ் சென்று எதிர்க்காமல் இப்படியே ஓடிப்

போவதுதான் நல்லது என்று முடிவுசெய்தான். படைகளைத் திருப்பிக்கொண்டு விரைந்து ஓடிவிட்டான்.

பாண்டியன் தகுந்த சமயத்தில் தன்னுடைய பகைவர்களையெல்லாம் ஓட்டி நட்புக்கொள்ளாமல் இருந்திருப்பின் மிகுந்த அல்லலுக்கு உள்ளாகி யிருப்பான். அவன் தகுந்த சமயத்தில் பகைவர்களைத் தழுவி நட்புக்கொண்டதைப் பலரும் வியந்து பாராட்டினார்கள்.

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கோளல்.

**வினைசெயல்வகை, செய். 9.**

(இ - ள்.) நண்பர்களுக்கு நன்மைகளைச் செய்வதைப் பார்க்கினும், பகைவர்களை நண்பர்களாக்கிக் கொள்ளுதல் விரைந்து செய்யப் பெற வேண்டியதாகும்.

## ௩௨. கண்ணபிரான் தூது

பாரதப்போர் நிகழ்வதற்கு முன்பு பாண்டவர்கள் பாம்புக்கொடியோனிடம் தூதனுப்ப எண்ணினார்கள். யாரை அனுப்பலாமென்று ஆராய்ந்தார்கள். கண்ணபிரானே தக்கவர் என்று முடிவு செய்தார்கள். மண்ணகத்தாரும் விண்ணகத்தாரும் போற்றும் அக் கண்ணபிரானைத் தங்கட்காகத் தூது சென்று துரியோதனனிடம் பேசிவருமாறு அனுப்பினார்கள். கண்ணபிரான் எல்லோரிடத்திலும் அன்புமிகுந்தவர். உயர்ந்தகுடியிற் றோன்றிய சிறந்த பண்பு வாய்ந்தவர். அரசர்கள் அனைவராலும் போற்றப்பெறும் ஏற்றமுடையவர். கூற்றுவனே எதிர்ப்பினும் அவனுடைய ஆற்றலையும் மாற்றத் தகுந்த தோற்றமுடையவர். அவர்

துரியோதனனிடஞ் சென்று பாண்டவர் கூறியதைக் கூறினார். கண்ணிலான் மகன் கண்ணபிரான் கூறிய மொழிகட்குக் கட்டுப்படவில்லை. அவன் போர்தொடங்குவதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்தான்.

தூதுவந்த கண்ணபிரானைக் கொன்று தொலைப்பதற்குஞ் சூழ்ச்சி செய்தான். ஆனால், கண்ணபிரானை யாதுஞ் செய்ய முடியவில்லை. அவர் தாம் கூறவேண்டிய செய்தியைக் கூறிவிட்டுச் சென்றார்.

நல்லியல்புகள் அனைத்தும் கண்ணபிரானிடம் அமைந்திருந்தபடியால், கண்ணபிரானுக்குத் தீமை செய்துங்கூடத் துரியோதனன் உடனே அழிந்தொழியாமல் பிழைத்தான். பிழை பொறுக்கும் இயல்பு கண்ணபிரானிடம் இல்லாதிருந்திருக்குமாயின் பாரத நிகழ்ச்சியே வேறு விதமாக முடிந்திருக்கும். ஆகையால் தான் திருவள்ளுவர் 'தூது செல்வார்க்கு நல்லியல்புகளெல்லாம் அமைந் திருக்க வேண்டும்' என்றார்.

அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

தூது' செய். 1.

(இ - ள்.) தூது மொழிகளைச் சொல்லுவோனுக்கு உரிய நல்லியல்புகளாவன, யாவர் மாட்டும் அன்புடையவனாக இருத்தலும், சிறந்த குடியிலே தோன்றியிருத்தலும் அரசர்களால் விரும்பப் பெறுகிற உயரிய நலன்கள்செறிந்திருத்தலும் ஆகியவைகளாம்.

## ௬௬. சிற்றுரையாடிச் சிறுநகை புரிந்தோர்

ஓர் அரசனுடைய பேரவை கூடியிருந்தது. பல செய்திகள் அமைச்சர்களாற் பேசப்பெற்று ஆராயப் பெற்றன. அவையில் அமர்ந்திருந்தோர் அந் நிகழ்ச்சிகளைக் கருத்தூன்றிப் பார்த்திருந்தார்கள். அரசன் அவையினர் செயலை அடிக்கடி கூர்மையாக நோக்கிக் கொண்டிருந்தான். ஒரு மூலையில் இரண்டுபேர் காதில் வாயை வைத்து அடிக்கடி மறைவாகப் பேசுவதும் சிறு நகை புரிவதுமாக நெடுநேரமிருந்தனர். அவர்கள் யாது பேசிக்கொள்கிறார்கள் என்பதை அரசன் அறிந்து கொள்வதற்கு முயன்றான். ஒன்றுந் தெரியவில்லை. ஆனால், அவர்களுடைய செவிப் பேச்சும் நகைத்துக் கொள்ளுதலும் நிற்கவில்லை. இறுதியில் அரசனுக்கு மிகுந்த சினமுண்டாகிவிட்டது. 'அரச அவையின் நடைமுறை நிகழ்ச்சிகளின்போது இடையிடையே இவர்கள் பேசி நகைப்பது நம்மைத்தான் ஏதோ இகழ்ந்து பேசி எள்ளி நகையாடுவதாகத் தெரிகிறது. இங்கு வந்திருந்து கொண்டு நம்மை இகழும் இவர்களை வெளியேற்றுதல் வேண்டும். அவ்வாறு செய்தால்தான் மற்றவர்கள் ஒழுங்காக இருப்பார்கள்' என்று முடிவு செய்தான். அவ்வாறு பேசி நகைத்துக்கொண்டிருந்தவர்கள் இரு செல்வர்களாவர்.

இன்னும் ஒருமுறை அவர்கள் பேசி நகையாடுதலை அவன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் அவர்கள் மீண்டுங் காதிலே வாய் வைத்துப் பேசி நகைத்தனர். அரசன் தன் அண்மையிலே நின்ற ஓர் ஏவலாளனைக் கூப்பிட்டு, மூலையிற் பேசி நகைத்துக்கொண்டிருந்த செல்வர்களிருவரையுந்

சுட்டிக்காட்டினன். 'அவர்களுடையபிடரியைப்பிடித்து வெளியே கொண்டுபோய்த் தள்ளிவிட்டுவா' என்று கட்டளையிட்டான். அந்த ஏவலாளன் திகைத்து நின்றான். அரசன் அவனைச் சினந்து நோக்கினன். சினம் தன்மேல் திரும்புவதைக் கண்ட ஏவலாள் உடனே விரைந்துசென்றான். பேசிக் கொண்டிருந்த இருவரையும் எழுமாறு கூறினன். அவர்களும் எழுந்தார்கள். ஏவலாள் அவர்கள் பிடரியைப் பிடித்துப், 'போங்கள் வெளியே' என்று கூறித் தள்ளினன்.

அச் செல்வர்களுக்கோ தாங்கள் வெளியேற்றப் படுவதின் காரணம் விளங்கவில்லை. அவையிலிருந்த அனைவரும் அரசன் செய்கையைக் கண்டு திகைத்தார்கள். வெளியேற்றப்பட்ட செல்வர்களோ பலர் முன்பு இழிவடைந்து வருந்திச் சென்றார்கள். பின்புதான் அரசன் அவர்கள் வெளியேற்றப்பட்டதன் காரணத்தை அவையிலுள்ளவர்கட்கு விளக்கிக் கூறினன்.

> செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையும் அவித்தொழுகல்
> ஆன்ற பெரியார் அகத்து.

மன்னரைச் சேர்ந்தொழுகல், செய். 4.

(இ - ள்) மாண்பிற்சிறந்தபெரியவர்கள் அண்மையிலிருக்கும் போது, காதிலே வாய்வைத்துப் பேசுகிற சிறுசொல்லும், ஒருவரைப் பார்த்து ஒருவர் நகைக்கும் சிறுநகையும், நீக்கி நடத்தல் வேண்டும்.

## ௩௯. அகத்தின் அழகு முகத்தில் தெரியும்

ஒரு செல்வர் ஒரு பொதுக்கூட்டத்திற்குச் சென்றார். ஓர் அறச் செயலின்பொருட்டு ஆயிரம் வெண்பொற்காசுகள் நன்கொடையளிப்பதாக அவர் வாக்களித்திருந்தார். அந்த நன்கொடையைக் கொடுக்கும் பொருட்டே அவர் கூட்டத்திற்குச் சென்றார். அவருடைய பணப்பையில் ஆயிரரூபா பத்துத்தாள்களாக இருந்தது. அந்தப்பை அவருடைய சட்டைப்பையிலே இருந்தது. அவர் கூட்டத்தைத் தாண்டித் தலைவர்கள் அமர்ந்திருந்த மேடைக்குச் சென்றார். நன்கொடையை நல்கும்பொருட்டுச்சட்டைப்பையிலேகையைவிட்டார். சட்டைப்பை வெறுமையாக இருந்தது. அவர் கூட்டத்தைத் தாண்டிச் சென்றுகொண்டிருந்தபோது யாரோ அப்பையைக் களவாடி விட்டார்கள். கூட்டத்தில் ஏறக்குறைய இரண்டாயிரம் பேர் இருக்கலாம்.

பணப்பை களவுபோன செய்தியை உடனே அச் செல்வர் மேடைமீதிருந்தவாறே வெளிப்படுத்தினார். கூட்டத்தை ஒழுங்குபடுத்துவதற்கும் காவல் புரிவதற்கும் அங்கு ஊர்க்காவல் மள்ளர்கள் [போலீசார்] நாலைந்து பேர்கள் வந்திருந்தனர். அவர்கள் உடனே கூட்டத்தைச் சூழ்ந்து வளைத்துக் கொண்டனர். கூட்டத்திலுள்ளவர்கள் வெளியே போகாமலும், வெளியேயுள்ளவர்கள் கூட்டத்தில்வந்து சேராமலும் அவர்கள் தடைசெய்து விட்டனர்.

மேடைமேல் இருந்த தலைவர்கள், 'நன்கொடையாளர் கொண்டுவந்திருந்த பொருள் பொதுநலத்திற்காதலின், தவறுதலாக எடுத்தவர்கள் அருளுடன் திரும்பக் கொடுத்துவிடுங்கள்' என்று குழைவுடன்

வேண்டிக்கொண்டனர். பணப்பை மீளவில்லை. ஊர்க்காவல் மள்ளர்கள் கூட்டத்தினர் ஒவ்வொருவரையுங் கூர்ந்து நோக்கினர். யார் கள்ளவிழி விழிக்கின்றனர் என்று மெள்ளப் பார்த்தனர். எல்லோருடைய முகங்களும் களங்கமற்றே விளங்கின. தடியனுக இருந்த ஒருவன் மாத்திரம் மிரளமிரள விழித்தான். அவனுடைய பார்வை கள்ளப்பார்வையாக இருந்தது. அச்சமிகுதியால் உடலும் வெளுத்துக் காணப்பட்டது.

ஊர்க்காவல் மள்ளர்கள் அந்தத் தடியனைப் பிடித்துக்கொண்டு, 'உன்னை நன்கு ஆராயவேண்டும்; நீ கள்ளவிழி விழிக்கின்ருய்' என்றனர். உடனே அவனுடைய சட்டைப்பை மடி முதலியவைகளை ஆராய்ந்து பார்த்தனர். பணப்பை அவனுடைய மடியிலிருந்து நொடியில் அகப்பட்டது. ஊர்க்காவல் மள்ளர்கள் அப்பையை உரியவரிடஞ் சேர்த்துவிட்டுக் கள்ளனை ஊர்க்காவல் நிலையத்திற்கு (Police Station) அழைத்துச் சென்றனர். அங்கு அவன்மீது களவுக்குற்றஞ் சுமத்தப்பட்டது. குற்ற உசாவலில் நன்கு ஒறுக்கப்பட்டான். நெஞ்சத்தின்கண் உள்ளதை முகம் வெளிப்படுத்திவிடுமென்பது அன்று அனைவருக்கும் நன்கு விளங்கியது.

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்.

**குறிப்பறிதல், செய். 6.**

**(இ - ள்.)** தன்னையடுத்துள்ளபொருள்களின் நிறத்தைத் தன்னிடத்திலே காட்டுகின்றபளிங்கைப்போல, ஒருவனுடையஉள்ளத்தில் மிகுந்துள்ளதாகிய இயல்பினை அவனுடைய முகமானது வெளிப்படுத்தும்.

## ௩௫. ஆசிரியர் கூறிய அறிவுரை

பெருந்தமிழ்ப் புலவர் ஒருவரிடத்திலே ஒரு மாணவன் கல்வி கற்றுக்கொண்டிருந்தான். அவன் அறிவுடையவனேயாயினும் எதனையும் நன்கு பகுத்தறியான். தனக்குள்ளது பிறருக்கும் உள்ளது; தனக்கு இல்லாதது பிறருக்கும் இல்லையென்று எண்ணும் உள்ளமுடையவன். அவன் சிறிது கல்வி கற்றுத்தேர்ந்த அளவிலே எல்லோருந் தன்னைப்போன்றே கல்வி கற்றுத் தேர்ந்திருப்பாரென்ன, எண்ணிக்கொண்டான். எவர் எவர் இடத்திலே எவ்வெவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்பது அவனுக்கு விளங்கவில்லை. ஒரு நாள் அவனுடைய ஆசிரியர் அம்மாணவனை நோக்கிப் "பால் சிறிது வாங்கிவா' என்று கூறி அனுப்பினார். அவனுக்குப் பால் கிடைக்கக்கூடிய இடம் தெரியவில்லை. தெருவிற் சுற்றிக்கொண்டு வரும்போது எதிர்ப்பட்ட ஒருவரைக் கண்டு, 'அன்பு செழுமிய பண்புடையீர் எற்கு ஆன்பால் சிறிது வேண்டும். அஃதியாண்டுக் கிடைக்குமென்பதை அறைகுவீர்களாக!' என்று கேட்டான். அவர் தன்னைப்போல் தமிழ் படித்தவரல்லராகலான் தன்பேச்சு அவருக்கு விளங்காதென்பதை அம்மாணவன் சிறிதும் எண்ணிப்பார்க்கவில்லை. மாணவன் கேட்ட கேள்விக்கு அம்மனிதர் பதிலுரைக்க வில்லை. இவன் என்ன சொல்லுகிறான் என்பதே அவருக்கு விளங்கவில்லை. அவர், 'இவன் ஒரு கிறுக்கனாக இருப்பான்போல் தெரிகிறது. தன் கன்னத்தில் அடிக்கச் சொல்லுகிறான் போல் இருக்கிறது' என்று எண்ணியவராய், நமக்கென்ன நாம் ஓர் அறைகொடுத்தாற் போகிறது என்று அவன் கன்னத்திற் பளீர் என்று ஓர் அறை கொடுத்தார்.

அடியைப் பெற்ற மாணவன் ஆசிரியரிடம் சென்று நிகழ்ந்ததைக் கூறினான். அவருக்கு ஒருபுறம் நகைப்பும் மற்றொருபுறம் வருத்தமும் ஏற்பட்டது. அவர் மாணவனைப் பார்த்து, "எல்லோருமே உன்னைப்போல் தமிழ்படித்து அறிவாளிகளாக விளங்குகின்றார்கள் என்று நீ எண்ணிக்கொண்டிருக்கின்றாய்? கெழுமிய, எற்கு, ஆன், யாண்டு, அறைவீர்களாக ஆகிய மொழிகள் எல்லோருக்கும் விளங்குமா? நீ 'அறைவீர்களாக' என்று கூறியபடியால் அம்மனிதன் உன் கன்னத்தில் அடித்துவிட்டுப் போய்விட்டான். இனிமேல் இவ்வாறு எல்லோரிடமும் பேசாதே. நம்மைப்போல் நூல்களைப் படித்தவர்களிடத்திலேதான் இவ்வாறு பேசுதல் வேண்டும்; அறிவற்றவர்களிடத்திலே இனிமேல் அவ்வாறு பேசாதே. 'அறிவுடையவர்களிடத்திலே அறிவுடையவர்களாக இருத்தல் வேண்டும். அறிவற்றவர்களிடத்திலே அறிவற்றவர்களாக இருத்தல் வேண்டும். நூல்களைப் படித்து நாம் தெரிந்துகொண்டுள்ளபடி எல்லோரும் தெரிந்துகொண்டிருப்பார்களென்று எண்ணாதே' என்று அறிவுரை கூறினார். மாணவன் அதன் பிறகுதான் மற்றவர்களிடம் தக்கவாறு பேசவும் நடந்துகொள்ளவும் தொடங்கினான்.

ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

**அவையறிதல், செய். 4.**

**(இ - ள்.)** *அறிவிற்சிறந்தார் அவைக்கண் தாமும் அறிவுடையராக விளங்குதல் வேண்டும்; அறிவற்ற மூழுமக்களிடத்திலோ, தாமும் வெள்ளிய சுண்ணச்சாந்துபோல் அறிவற்றவராக நிற்றல் வேண்டும்.*

ஒரு புலவர் பலநூல்களையும் நன்கு பயின்று சிறந்த புலமையடைந்து திகழ்ந்தார். தாமே பல நூல்களையும் எழுதி வெளியிட்டு வந்தார். அவரெழுதிய நூல்கள் எல்லோராலும் நன்கு போற்றப்பெற்று மதிப்பையடைந்தன. அறிஞர்கள் பலர்கூடிய பேரவையொன்று ஒருகால் ஓர் ஊரிலே கூடியது. அவ்வவைக்கு அந்தப் புலவருஞ் சென்றிருந்தார். அவையினர் யாதேனும் ஒரு பொருளைக் குறித்துச் சொற்பொழிவாற்றுமாறும் அவருடைய உரைகளைக் கேட்டுக் களிப்படைய எல்லோரும் அவாக்கொண்டிருப்பதாகவும் மிகவும் வேண்டிக் கொண்டனர்.

அந்தச் செந்தமிழ்ப் புலவருடைய பண்பு அவையினருக்குத் தெரியாது. அப்புலவர் எவ்வளவு வேண்டுமானாலும் அரைநாழிகைக்குள் எழுதித்தள்ளிவிடுவார். இரண்டொருவர் கூடியிருக்கும் இடமாக இருந்தால் கார்காலத்து முகில் பெருமழை பொழிவதைப் போலப் பேசிக் குதிப்பார். ஆனால் அவையென்று கூறப்படுவதாய்ப் பலர் கூடியவிடத்திலோ, வாய்திறந்து ஒருமொழி உரைப்பதுதானும் அவரால் இயலாது. அவையஞ்சுதல் என்னும் நவைமிகு பண்புதான் அதற்குக் காரணம். கூட்டத்தினர் எவ்வளவோ வேண்டிக் கேட்டுக்கொண்டும் புலவர் தம்மாற் பேசமுடியாது என்று கண்டிப்பாக மறுத்துவிட்டார். 'பேசினால் என்ன தவறு அப்பேச்சில் ஏற்பட்டுவிடுமோ, அதன் பொருட்டு யார் நம்மை என்ன செய்வார்களோ, அல்லது உம்முடைய பேச்சு நன்றாக இல்லை என்று நம்மை இகழ்ந்து பழித்துவிடுவார்களோ' என்னும் அச்சந்தான்

*புலவரின் வாயைக் கட்டிவிட்டது. அப்புலவரின் பேச்சைக் கேட்பதற்குப் பேரவாக் கொண்டவர்கள் ஏமாந்து போனார்கள்.*

*சிலர், 'இப்புலவர் பன்னூல்களைப் பழுதறக் கற்றிருந்தாலும் அவரால் யாருக்கும் ஒரு பயனுமில்லை. அவையஞ்சும் இழிகுணமுடையவர்கள் நூல்களைத் தூக்கிக் கொண்டு எதற்காகப் படிக்கவேண்டும். கூட்டத்தில் 'பேசினால் யாராவது பிடித்து விழுங்கியாவிடுவார்கள்? அல்லது வாயிலிருக்கிற பற்களா உதிர்ந்து போகும்?' என்று தம்மனம் போனபடி பலவாறு இகழ்ந்துரைத்தார்கள். புலவர் மெதுவாக நழுவிக் கூட்டத்தைவிட்டுச் சென்று விட்டார். இனிக் கூட்டத்தில் வந்து மாட்டிக்கொண்டு விழிக்கக்கூடாது என்றும் அவர் முடிவு செய்து கொண்டார். இவ்வாறு அவருடைய கல்வி பயனற்றதாக முடிந்தது.*

பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்குசெலச் சொல்லா தார்.

**அவையஞ்சாமை செய், 8.**

(இ - ள்.) *அறிஞர்கள் கூடிய அவைக்கண் நல்ல சொற்பொருளை அவையோர் ஏற்குமாறு கூறற்கியலாதவர்கள், பல நூல்களைக் கற்றிருந்தாராயினும் அக் கல்வியறிவால் யாதும் பயனையடையார்.*

## கஎ. பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை

வீரபாண்டியக் கட்டபொம்மன் ஆண்டிருந்த பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையானது பாதுகாப்பதற்கு மிகவும் எளிதாக அமைந்திருந்தது. உள்ளே பலர் தங்கியிருப்பதற்கு ஏற்றதாகப் பொருந்தியிருந்தது. வீரபாண்டியக் கட்டபொம்மனுக்கும் ஆங்கிலேயருக்கும் வேற்றுமையேற்பட்டுக் கலாம் விளைந்து அது வளர்ந்துகொண்டு வந்தது. ஆங்கிலப் படைத்தலைவன் ஒருவன் தற்காலப் போர்க்கருவிகளான சுடுபொறி (துப்பாக்கி) பேரழிவுப்பொறி (பீரங்கி) முதலிய போர்க்கருவிகளுடன் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையை வளைத்துக்கொண்டான். உள்ளே போர் மறவர்கள் குறைந்த அளவில்தான் இருந்தார்கள். அரணை வளைத்த ஆங்கிலப் படைத்தலைவன் கோட்டைக்குள்ளே நுழைந்து கேட்டை விளைவிக்க முயன்றான். போர் மறவர்கள் சிலரை உள்ளே நுழையுமாறு ஏவினான். அவர்களும் அவ்வாறே நுழைந்தார்கள். உள்ளே வீரபாண்டியக் கட்டபொம்மனின் போராட்கள் கையிற்பிடித்த ஈட்டியுடன் பகைவர்களை வீழ்த்துதற்குத் தோதாக அமைந்து நின்றார்கள். உள்ளே புகுந்த ஆங்கிலப் படையினரின் உடலுக்குள்ளே ஈட்டி புகுந்து அவர்களை வாட்டி விழுமாறு செய்தது. ஆங்கிலப் படைத்தலைவன் உள்ளே கூற்றுவன் இருப்பதாகவே எண்ணினான். அவனுக்கு அளவுகடந்த அச்சமுண்டாகிவிட்டது. இங்குச் சிறிதுபோது நாம் தாழ்த்து நிற்போமாயினும் இறந்துபடுவது திண்ணமென்று உறுதியாக அறிந்தான். கட்டபொம்மனின் கோட்டை அவனுக்கு மிகுந்த அச்சத்தை விளைவித்

தது. தன் படையை அழைத்துக்கொண்டு மிகவிரைவாகத் தான் புறப்பட்ட இடத்திற்கே ஓடிப்போனான். திருவள்ளுவருடைய குறட்கோட்டைக்கு வீரபாண்டியக் கட்டபொம்மனின் ஊர்க்கோட்டையே தக்க எடுத்துக்காட்டாகியது.

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
ஊக்க மழிப்ப தரண்.

அரண், செய். 4.

(இ-ள்.) கோட்டையாவது காக்கவேண்டுமிடஞ் சிறியதாய், உள்ளே பலருந் தங்குதற்குப் பெரிய இடம் அமையப்பெற்றதாய், தன்னை நெருங்கிய பெரும் பகைவரின் மனவெழுச்சியையும் தொலைப்பதாக அமைந்ததேயாகும்.

## ௩அ. நேர்மையுள்ள நீதித் தலைவர்

ஒரு பெருஞ் செல்வன் பெருங்குற்றம் ஒன்றைப் புரிந்துவிட்டான். பொருளைக் கொடுத்து ஒறுத்தலுக்கு ஆளாகாமல் நீங்கிக் கொள்ளலாம் என்பது அவனுடைய எண்ணம். செல்வன்மீது நீதிமன்றத்தில் வழக்குத் தொடரப்பட்டது. குற்ற உசாவல் (வழக்கு விசாரணை) நடைபெற்றது. முதலிற் செல்வன் தான் ஒரு பெருஞ் செல்வனாதலால், அறமன்றத் தலைவர் எவ்வாறாயினும் தன்னை விடுவிக்க முயல்வார் என்று எண்ணிக்கொண்டிருந்தான். வழக்கறிஞர்கள் வழக்கின் போக்கைக் கூர்ந்து நோக்கினர். குற்றம் மெய்ப்பிக்கப் படுதலை யுணர்ந்தனர். தக்கபடி செல்வன் ஒறுக்கப்படுவான் என்பது அவர்கட்கு ஐயமறவிளங்கியது. அவர்கள் செல்வனையடைந்து, 'தங்கள்மேல் சாற்றப்பட்டுள்ள குற்றம் உறுதிசெய்யப்படுகிறது. தாங்கள் ஒருவனைக் கொலை செய்வதற்குத் தூண்டியதாகவும் கொலைக்குக்

காரணமாக இருந்ததாகவும் முடிவு பெறுகிறது. தாங்கள் உடனே அறநெறிமன்றத் தலைவரிடஞ் சென்று கண்டு தக்கவாறு வேண்டிக்கொண்டால்தான் ஒறுத்தல் சிறிதாவது குறையும்; தூக்கிற் போடப்படுதலோ அல்லது அந்தமான் தீவுக்கு அனுப்புதலோ ஏற்படக் கூடும்' என்று உரைத்தனர்.

வழக்கறிஞர்களின் உரையைக் கேட்ட செல்வன் அச்சத்தை யடைந்தான். ஐம்பதாயிரம் வெண்பொற் காசுகளை எடுத்துக்கொண்டு ஒருநாள் இரவு தனியே அறமன்றத் தலைவர் இல்லத்துக்குச் சென்றான். அவரைக் கண்டு வணங்கினான். பொருள்களை அவர் முன்புவைத்தான். தான் தவறுதலாகக் குற்றமிழைத்து விட்டதாகவும், தன்னைக் கடுமையாக ஒறுக்காம லிருக்கவேண்டும் என்றும் வேண்டிக்கொண்டான். அவன் அவ்வாறு வேண்டிக்கொள்வதனாலேயே அவன் மீது குற்றம் உளதாதலை அறமன்றத் தலைவர் ஐயமற உணர்ந்துகொண்டார். தாம் கைக்கூலி பெற்றுக் கொண்டு அறநெறியிற் பிறழமுடியாதென்று கண்டிப் பாகக் கூறிவிட்டு, அவன் கொண்டுவந்த பொருளையும் அப்படியே எடுத்துக்கொண்டு போகுமாறு சொல்லி விட்டார்.

செல்வன் அறமன்றத் தலைவர் பெரும் பொருளைக் கண்டால் உள்ளந்திரிந்து தன்மாட்டுப் பேரிரக்கங் கொள்வார் என்று எதிர்பார்த்தது வீணாயிற்று. அவன் அறமன்றத்தலைவரின் நேர்மையைக்கண்டு வியப்படைந் தான். உசாவல் முடிவில் அவனைத் தீவுக்கனுப்புமாறு முடிவு செய்யப்பட்டது. அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கத்தை நல்லோர் பொருட்படுத்த

மாட்டார்களென்பது அவ்வறமன்றத் தலைவர்பால் நன்கு உணரப்பட்டது

> அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
> புல்லார் புரள விடல்.

**பொருள் செயல்வகை, செய். 5.**

(**இ - ள்.**) தம்கீழ் வாழ்வாரிடத்திலே காட்டப்பெறவேண்டிய அருளினோடும், அவர்களிடத்திலே செய்யப்பெறவேண்டிய அன்புடனும், வாராத பொருட்பேற்றை அடையாமல் தள்ளிவிடுதல் வேண்டும்.

## ௩௪. வெற்றியடைந்த சிறு படை

மகாராட்டிரராகிய சிவாஜியைப்பற்றி அனைவரும் நன்குணர்வர். அவருடைய படையிலிருந்த போர் மறவர்கள் மிகுந்த ஆண்மை படைத்தவர்கள். அஞ்சா நெஞ்சமும் எஞ்சாத் திறலும் உடையவர்கள். சிவாஜியின் படையில் முதலில் மிகுந்த போர்மறவர்கள் இல்லை. இருநூறு முந்நூறு பேர்களே இருந்தார்கள். ஒவ்வொருவரும் பேராண்மையாளர்களாதலால் சிவாஜி அந்தப் படைஞரைக் கொண்டே பெரிய பெரிய படைகளை வென்று பல நாடுகளைக் கைப்பற்றினர்.

ஒருமுறை முந்நூறு பேர்களைக் கொண்ட ஒரு படையுடன் ஐயாயிரம் பேர்களுக்குமேல் அடங்கிய முகம்மதியர் படையொன்றை எதிர்த்தார். ஒவ்வொருவரும் கூற்றுவன்போற் சீற்றங்கொண்டு முகம்மதியர் படைமீது பாய்ந்து தாக்கினர். முகம்மதியர்களும் நல்ல ஆண்மையமைந்த இராவுத்தர்களாதலால் பின் வாங்காமல் எதிர்த்துப் போராடித் தாக்கினர். ஆனால் இராசபுத்திரர்கள் எதற்கும் பின்னடையவில்லை. முகம்மதியர்களோ இராசபுத்திரர்களின் தாக்குதலுக்குத்

தோற்று ஓட்டம் பிடித்தனர். இறுதியில் இராச புத்திரர்கட்கே வெற்றி கிடைத்தது. முகம்மதியர்கள் சிறுபடைக்குத் தோற்றேமே யென்று மிகவும் நாணினர். சிவாஜி இறுதியில் பல நாடுகளை வென்று மிகுந்த சிறப்படைந்ததற்கு, எதற்கும் அஞ்சாத அவருடைய படைதான் காரணமாக விளங்கியது.

கூற்றுடன்று மேல்வரினும் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை.

**படைமாட்சி, செய். 5.**

(இ - ள்.) படையாவது, நமன்தானே சினந்து எதிர்த்து வந்தாலும். ஒன்றாகத் திரண்டு எதிர்த்துநிற்கும் ஆற்றலமைந்ததாகும்.

## ௬௦. அச்சங்கொண்ட அசமுகன்

முருகக்கடவுளுக்கும் சூரபன்மனுக்கும் போர் தொடங்கியது. முருகக்கடவுளின் படையைச் சேர்ந்த மது என்பவரும், சூரபன்மன் படையைச் சேர்ந்த அசமுகன் என்பவனும் எதிர்த்துப் போர் செய்யத் தொடங்கினர். அசமுகன் வில்லை வளைத்து நாணொலி செய்தான். மது என்பவர்மீது கணைகளைச் செலுத்தினன். மது என்னும் படைத்தலைவர் அவுணன் கணைகளைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை. எதற்கும் அஞ்சவில்லை. அசமுகனுடைய தேரிற்பாய்ந்து இடிபோலப் பெரு முழக்கஞ் செய்தார். அசமுகன் அவ்வொலியைக் கேட்டு அஞ்சி நடுங்கினன். தன்கையிலிருந்த வில்லையுங் கணைகளையும் நழுவவிட்டுவிட்டான். பேந்தப் பேந்த விழித்தான். அதனை மதுவென்பவர் பார்த்தார். 'நீ என்னுடன் போர் செய்தற்குத் தகுந்தவனல்லன். உன்னிடம் ஆண்மையில்லை. நீ ஒரு பெரிய தொடை

நடுங்கியாக இருக்கின்றாய். நான் உனக்கு உயிர்கொடுத்தேன் பிழைத்துப்போவாயாக' என்று கூறினார். அவனுடைய தேரைவிட்டு இறங்கி வேறிடஞ் சென்றார்.

அவர் அப்பாற்சென்றபின் அசமுகன் தன்னுணர்வு வரப்பெற்றான். மிகுந்த நாணங்கொண்டான். 'நான் போருக்கு அஞ்சியவன் என்னும் இழிசொல்லைப் பெற்றேன். இந்த இழிவு எளிதில் நீங்காது.' என்று வருந்தினான். அவனுடைய உள்ளமே அவனைச் சுட்டது. அதனால், அவன் மீண்டும் போர் செய்ய எண்ணினான். மதுவைத் தொடர்ந்து, 'நான் இதோ உன்னோடு போர் செய்தற்கு வந்தேன்' என்று கூறிக்கொண்டு மதுவைத் தொடர்ந்தான். அசமுகன் செய்கையைக் கண்டு மது எள்ளிநகையாடினார். அன்று அசமுகன் மதுவுக்கு அஞ்சியது பிறகு எல்லாரும் அசமுகனை எள்ளிநகையாடுதற்கு இடமாயிற்று. ஆகவே, போர் மறவராயினார் சினந்து விழித்த கண் பார்வையைப் பகைவன் எறிந்த வேலைக்கண்டு அஞ்சி மாற்றுவார்களாயின் அஃது அவர்கட்குத் தோல்வியாகவே முடியும்.

விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு

படைச்செருக்கு, செய். 5.

(இ - ள்.) பகைவரைச் சினந்துநோக்கியகண், அப் பகைவர் வேலைக்கொண்டு வீச அதற்குப் பொறாமல் மாறுபட்டு இமைக்குமாயின், அஃது அஞ்சாமையையுடைய போர்மறவர்களாயினார்க்கு, புறங்கொடுத்தல் ஆகும் அல்லவோ?

## ௯௧. கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையாரும்

உறையூரிற் கோப்பெருஞ் சோழன் என்பவன் அரசாட்சி செய்துகொண்டிருந்தான். அவன் அறிவு நலம் நிரம்பப்பெற்றவன். அவன் பல புலவர்களைத் தன்னுடன் வைத்துக்கொண்டு நூலாராய்ச்சி செய்து மகிழ்ச்சியுடன் பொழுதுபோக்கினான். பிசிராந்தையார் என்பவர் பாண்டியநாட்டைச் சேர்ந்தவர். நுண்மாணுழைபுலம் படைத்த அறிஞர். அரிய குணங்கள் பலவும் ஒருங்கே செறியப் பெற்றவர். பிசிராந்தையாரது குண நலன்களையும் புலமைத் திறமையையுங் கோப்பெருஞ் சோழன் கேள்வியுற்றான். அவர்பால் உழுவலன்பு கொண்டான். பிசிராந்தையாருங் கோப்பெருஞ் சோழனது குண நலங்களையும் அறிவுவன்மையையுங் கேள்வியுற்று அவன் மாட்டுப் பேரன்பு கொண்டார். இருவரும் ஒருவரை யொருவர் நேரிற் பார்த்திலர். ஒருவரைப்பற்றி மற்றொருவர் கேள்வியாலறிந் திருந்தமையையன்றிக் கண்டு மகிழ்வதற்குச் சமயம் வாய்க்கவில்லை. அவ்வாறாகவும் இருவருடைய நட்பும் நாள்தோறும் வளர்ந்துகொண்டே யிருந்தது. கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர்விட எண்ணி அவ்வாறே யிருந்தான். வடக்கிருத்தலாவது புலன்களை யொடுக்கி உள்ளத்தை இறைவன்பால் நிறுத்தி வடக்குத் திக்கை நோக்கி அமர்ந்திருந்து உயிரை யோக வழியால் வெளிப்படுத்துதல். அவ்வாறு உயிர் விடுவோர் நற்பேறு பெறுவர்.

வடக்கிருந்த சோழனைச் சுற்றி மக்கள் பெருந் திரளாகக் கூடியிருந்தனர். புலனடக்கியிருந்த கோப்

பெருஞ் சோழன் புலனடக்கத்தைச் (யோகம்) சிறிது போது நிறுத்திவிட்டுக் கூட்டத்தினரைப் பார்த்து, 'என்னுடைய ஆருயிர் நண்பர் பிசிராந்தையார் என்னுடன் வடக்கிருந்து உயிர்விடுதற்காக வருகின்றார். அவருக்குச் சிறிது வழிவிட்டு விலகியிருங்கள்' என்று கூறினான். கூட்டத்தினர் கண்ணுக்கெட்டிய தொலைவரை பார்த்தார்கள். யாரும் வருவதாகத் தெரியவில்லை. அரசன் ஏதோ அறிவு கலங்கிப் பேசுகின்றான் என்று அனைவரும் எண்ணினர். சிறிது நேரத்திற்கெல்லாம் பிசிராந்தையார் அவ்விடத்திற்கு அலறிக்கொண்டு வந்து சேர்ந்தார். கூட்டத்தினர் அவரைக் கண்டு வியப் படைந்தனர். கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தையாரும் ஒருவரையொருவர் கட்டித் தழுவி இன்னுரை யாடினர். இருவரும் ஒருங்கே வடக்கிருந்தனர். இருவருடைய உயிர்களும் ஒரே சமயத்திற் பிரிந்து போயின. சேர்ந்து பழகாத அவ்விரு நண்பர்களின் நட்பு மாண்பையும் எண்ணிக் கூட்டத்தினர் உள்ளமுருகினர்.

> புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான்
> நட்பாங் கிழமை தரும்.

**நட்பு, செய். 5.**

(இ - ள்.) ஒருவரோடொருவர் நட்பாதற்கு ஓரிடத்திருத்தலும் பல முறை யடுத்தடுத்துக் காண்டலும் ஆகியவைகள் வேண்டியதில்லை; இருவருக்கும் ஒத்த அறிவு ஒன்று இருப்பதுமட்டுமே, நண்பர்களாகின்ற வுரிமையைக் கொடுத்துவிடும்.

## ௬௨. ஆய்ந்தாய்ந்து கொள்ளாத நட்பு

உயர்குடியிற் பிறந்த இளைஞன் ஒருவன் ஓர் ஊருக்கு வழிப்பயணஞ் சென்றுகொண்டிருந்தான். அவன் வறிய குடும்பத்தைச் சேர்ந்த எளியவனுகையால் ஊர்திகளிற் செல்லத்தக்க செல்வநிலைமை அவனுக் கில்லை. ஆகையால், அவன் கால்நடையாகவே சென்று கொண்டிருந்தான். அவன் புறப்பட்ட ஊருக்கும் போய்ச் சேரவேண்டிய ஊருக்கும் இடையே உள்ள தொலை முப்பது கல். அவன் நண்பகலிற் புறப்பட்டா னுகையால் பாதிவழி சென்றதும் கதிரவன் மறைந்து விட்டான். எங்கும் இருள் சூழ்ந்துவிட்டது. இளைஞன் சென்றுகொண்டிருந்த இடத்திற்கு அண்மையில் தங்கு வதற்குத் தக்க இடமும் அகப்படவில்லை. ஆகவே, இளைஞன் அச்சத்துடனேயே சென்றுகொண்டிருந் தான். அப்பொழுது குறுக்குவழி ஒன்றிலிருந்து இருவர் பெருவழியில் வந்து சேர்ந்தனர். அவர்கள் வெள்ளிய உடை யணிந்தவர்களாகவும் கையில் ஆளுக்கொருதடி யுடையவர்களாகவும், நீண்டு வளர்ந்த நெடும்பனை போன்ற உயரமுடையவர்களாகவும் இருந்தனர். அவர் கள் இருவரும் கையில் ஒரு சிறு மூட்டையை வைத் திருந்தனர். அவர்கள் கீர்த்திபெற்ற பெருங் கள்ளர்கள். பலவிடங்களிற் களவு செய்தும் கொள்ளையடித்தும் கொலைபுரிந்தும் மக்களுக்குத் தீமையைச் செய்தவர்கள். அவர்களில் ஒருவன் பெயர் முண்டன். மற்றவன் பெயர் குண்டன். அவ் விருவரையும் ஊர்க்காவலர்கள் (போலீசார்கள்) காடு கரை முதலிய பல விடங்களினும் தேடிக்கொண்டு திரிந்தார்கள்.

இளைஞன் கள்ளர்களிருவரையுங் கண்டவுடன் சிறிது அச்சமடைந்தான். ஆனால், அவர்கள் கள்ளர்கள்

என்பதை அவனறியான். கள்ளர்களில் ஒருவன் இளைஞனைப் பார்த்துத், 'தம்பி! என்ன தனித்தவனாக இருளிற் செல்கிறாய்? கள்ளர்கள் கண்டால் பிடித்து உதைத்துக் கையில் உள்ளவற்றைப் பிடுங்கிக்கொண்டு போய்விட மாட்டார்களா?' என்றான். அதற்குச் சிறுவன், 'நான் ஒரு வறியவன்; என் கையிலே ஒன்றும் இல்லை. அவ்வாறாகக் கள்ளர்கள் என்னிடமிருந்து எதனைப் பிடுங்கிக்கொள்ளப் போகிறார்கள்? புகை வண்டியிற் செல்வதற்குக் கூட என்னிடம் பொருள் இல்லையே' என்றான். கள்ளர்கள் அவன் ஒரு நல்ல வறிய இளைஞனென்று தெரிந்துகொண்டு, 'நீ போகும் ஊருக்குத்தான் நாங்களும் போகிறோம்; எங்களுடன் தானே வா. உன்னை அங்கு விட்டுவிடுகிறோம்' என்று கூறிவிட்டு அவனுடன் உரையாடிக்கொண்டு சென்றனர். அவனுக்கு அகவை இருபத்தைந்து இருக்கும். வஞ்சகம் இல்லாமல் வளர்ந்திருந்தான். கள்ளங் கபடு இல்லாதவன்.

சிறிது தொலை சென்றவுடன் கள்ளர்கள் தங்களிடமிருந்த சிறிய மூட்டையை இளைஞனிடங் கொடுத்துத், 'தம்பி! இதனை நீ கொண்டுவா,' என்றனர். இளைஞனும் அப்படியே அந்த மூட்டையைத் தூக்கிக்கொண்டு அவர்களுடன் இன்னுரையாடியவாறு சென்றான். அம் மூட்டையிற் கன்னக்கோல்கள் இரண்டு. கொலை செய்யுங் கூரிய கொடிய படைக்கலங்கள் இரண்டு. திறவுகோல் கொத்து ஒன்று ஆகிய களவுக்குதவியாகும் பொருள்கள் இருந்தன. திடீரென்று ஊர்க்காவலர் கூட்டமொன்று அவர்கள்மீது பாய்ந்தது. கள்ளர்கள் இருவரும் துள்ளிப் பாய்ந்து தங்களைக் கட்டிப்பிடித்தவர்களை எட்டித்தள்ளிப் பறந்துபோய் விட்டனர்.

இளைஞன் ஒன்றுந்தெரியாமல் திகைத்தான். வந்து வளைத்தவர்களைத்தான் கள்ளரென்று எண்ணினன் தான் ஒரு பக்கமாகத் தன்கையிலிருந்த மூட்டையுடன் ஓடினன். ஆனல் ஊர்க்காவலர்கள் அவனைப் பிடித்துக் கொண்டார்கள். ஊர்க்காவல் நிலையத்திற்கு அவனை அழைத்துச் சென்ருர்கள். அங்கு அவன் வைத்திருந்த மூட்டையை ஆராய்ந்தார்கள். அதிலிருந்த பொருள் களைக்கொண்டு இளைஞனும் ஒரு கள்ளனென்றே முடிவுகட்டினர்கள். உண்மையை உரைக்குமாறு நன்கு புடைத்தார்கள். இளைஞன் உள்ளதைக் கூறினன். ஆனல் யாரும் அதனை நம்பவில்லை. அவன்மீது வழக்கு ஏற்பட்டது. அறமன்றத் தலைவர் இளைஞனுக்கு ஆயுள் முடிவுவரை சிறைத்தண்டனை விதித்தார். அவன் இறுதிவரை மிகுந்த தொல்லைப்படும்படியாக முடிந்து விட்டது.

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.

**நட்பாராய்தல், செய். 2.**

(இ - ள்.) பலகால் பல வழிகளாலும் ஆராய்ந்து கொள்ளாதவ னுடைய நட்பானது, இறுதிவரை, நட்புக்கொண்டவன் இறந் தொழிதற்கேதுவாகிய துன்பத்தினைக் கொடுக்கும்.

## ௬௩. புலவனும் புரவலனும்

ஓர் அரசனும் ஒரு புலவனும் மிகுந்த நண்பர்களாக இருந்தார்கள். அவர்கள் நட்பு நீண்டகாலமாகத் தொடர்ந்து வந்தது. அவர்களிருவரும் அடிக்கடி சொக்கட்டான் விளையாடுதல் வழக்கம். புலவன் அடிக்கடி அரசனுக்குத் தெரியாமல் கள்ளத்தனமாக ஆடிக்கொண்டிருந்தான். ஒரு முறை அரசன் புலவனது கள்ளத்தனத்தைக் கண்டுவிட்டான். அவனுக்குத் திடீரென்று முன்சினம் வந்துவிட்டது. சொக்கட்டான் காய்களை ஓங்கி மண்டைமீது எறிந்தான். அது தலையிற் பட்டுப் புலவனுக்குக் காயத்தை யுண்டு பண்ணிவிட்டது. அக்காயத்திலிருந்து குருதி வழிந்தது. அதனாற் புலவனுக்குஞ் சினமுண்டாகிவிட்டது. அரசனைப் பார்த்து, 'உன் தாய் உன்னை யாருக்குப் பெற்றாள்?' என்று கேட்டான். புலவன் கூறிய புன்மொழி அரசனுக்கு அளவுகடந்த மனவருத்தத்தை உண்டாக்கியது ஆயினும் அவன் புலவனைப் பார்த்துப் பெரியீர்! 'நான் அறியாது செய்துவிட்ட தவற்றினைத் தாங்கள் பொறுத்துக்கொள்ளவேண்டும்; அறிவின்மையினாலும் நெடுநாட் பழகிய உரிமையினாலும் தங்கட்குப் பெருந் தீமையினைப் புரிந்துவிட்டேன்,' என்று கூறினான். அரசனுடைய பணிவும் பண்பும் புலவனுக்கு அளவு கடந்த உவகையை விளைவித்தன. அவனுடைய சினம் மாறிவிட்டது. தான் கூறிய இழிவுரையை எண்ணி மிகவும் நாணினான்.

பிறகு அப்புலவன் அரசனைப் பார்த்து, 'அரசே! நீ உயர்குடியிற் பிறந்த பெருஞ் சிறப்பினையுடையவன். அதனால்தான் நான் இந்நேரம்வரை உயிர்பிழைத்திருக்

கின்றேன். நான் கூறிய கொடுமொழியை வேறோர் அரசனாயின் பொறுப்பாரோ? தவறு முழுதும் என்பால் இருக்கவும் நீயே தவறு செய்தவனைப்போல வருந்துகின்றாய். இதுவன்றோ உயர்குடியிற் பிறந்தவர்களின் பண்பு. நான் கூறிய புன்மொழியை நான் அறிவின்மையினாலோ உரிமையினாலோ கூறிவிட்டதாக எண்ணி என் பிழையை நீ பொறுத்துக்கொண்டாய்; உன் பெருந்தன்மைக்கு நான் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்,' என்று கூறி அரசனைப் புகழ்ந்து பாடினான். இவ்வாறு ஒவ்வொருவரும் தத்தம் பிழைகளைக் கண்டு பண்டுபோல் என்றும் நண்பர்களாக அமைந்து நின்றனர்.

> பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
> நோதக்க நட்டார் செயின்.

பழைமை செய்-5

(இ-ள்.) வெறுக்கத்தக்கவைகளை நண்பர்கள் செய்வார்களாயின் அதற்குக் காரணம் அறியாமை மட்டுமன்று, மிகுந்த உரிமையுமாம் என்று அறிந்துகொள்க.

## ௩௩. கைவிட்டோடிய காவலர்கள்

ஓர் அரசனுக்குப் பல சிற்றரசர்கள் நற்றுணையைப் போல அமைந்திருந்தார்கள். அரசனும் அச் சிற்றரசர்களை உற்றதுணையென முற்றும் நம்பியிருந்தான். சிற்றரசர்கள் அனைவரும் அவ்வரசனுக்கு நற்றுணை போன்று காணப்பெற்றபடியால் அவ்வரசன் வேற்றரசன் ஒருவனோடு மாறுகொண்டு போர் தொடங்கினான். அவ்வேற்றரசன் படைத்துணையும் பக்கத்துணையும் உடையவன். அவனுடைய படை கூற்றுடன்று மேல்வரினும் கூடியெதிர்க்கும் ஆற்றல் அமைந்தது.

இருபக்கத்துப் படைகளும் கைகலந்து கடும்போர் தொடங்கின. வேற்றரசன் படை ஆற்றல் மிக்கதாய்த் தாக்கியது. சிற்றரசர்களின் படை அஞ்சி நடுங்கியது. சிற்றரசர்கள் பேந்தப் பேந்த விழித்தனர். நம் உயிரை எப்படியேனும் காப்பாற்றிக்கொண்டால் போதுமென்று முடிவுசெய்தனர். மூலைக்கொருவராகத் தத்தம் படையோடு ஓடிப்போயினர். சிற்றரசர்கள் ஓடிப் போகவே அவர்களை நம்பிய அரசன் தனித்தவனுனன். அவனுடைய படையுஞ் சிறிதுதான். அவனால் நீண்ட நேரம் எதிர்த்துநிற்க முடியவில்லை. மிகுவிரைவில் வேற்றரசன் அவ்வரசனைச் சிறைபிடித்துவிட்டான்.

பகைவர்கள் கையிற் சிக்கிய அரசன் மிகவும் வருந்தினுன். 'அந்தோ! சமயத்தில் தக்கவாறு உதவி செய்யாதவர்களை நம்பிக் கெட்டோமே! நாம் மட்டுந் தனித்திருந்தாலும் இந்தப்போர் முதலிலேயே ஏற்படாமல் தடுத்திருக்கலாமே' என்று பலவாறு வருந்தினுன். தன்னைச் சிறைபிடித்த வேற்றரசனோடு ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு விடுதலை யடைந்தான். சிற்றரசர்கள் அவ்வரசனைச் சுற்ற வந்தனர். சிறைபிடிக்கப் பட்ட அரசன் அச்சிற்றரசர்களைப் பார்த்து, 'உங்களை நம்பியபடியினுல்தான் நான் அல்லலுக்கும் இழிவுக்கும் ஆளானேன். போர்க்களத்தில் உதவி செய்யவேண்டிய சமயத்தில் உதவி செய்யாமல் தலைவனை விட்டு விட்டு ஓடிப்போகுங் கல்வியற்ற குதிரையைப் போன்றவர்கள் நீங்கள். உங்கள் கூட்டுறவு எனக்கு வேண்டாம். வழக்கம்போல் இறைப்பொருளை முறைப்படி செலுத்திக்கொண்டு தொலைவிலேயே இருங்கள்' என்று இடித்துரைத்தான். கைவிட்டோடிய காவலர்கள் நாணம் அடைந்து திரும்பிச் சென்றனர்.

அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
தமரில் தனிமை தலை.

திருக்குறள், நட்பு, செய். 4.

(இ - ள்.) போர்வந்த விடத்திலே தலைவனைப் போர்க்களத்திலே தள்ளிவிட்டோடிப் போகின்ற போர்ப் பழக்கமில்லாத குதிரையைப் போன்றவர்களை, நட்புடையவர்களாகப் பெற்று இருத்தலைப் பார்க்கினும் தனியராயிருத்தலே சிறந்ததாம்.

## ௩௫. காந்தியைக் கொன்ற கயவன்

விநாயககாட்சே என்பவன் வடநாட்டைச் சேர்ந்தவன். இவன் எக் காரணத்தை முன்னிட்டோ காந்தியடிகள்மீது பகைகொண்டிருந்தான். காந்தியடிகளோ உலகப் பெரியார். 'தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான் பிறி, தின்னுயிர் நீக்கும் வினை' என்னும் குறளுக்கோர் எடுத்துக்காட்டாக அமைந்தவர். இந்திய மக்களுக்கு உரிமையினை ஆங்கிலேயரிடம் இருந்து பெற்றுக்கொடுத்த பேரருளாளர்.

காந்தியடிகள்மீது பகைகொண்ட விநாயககாட்சே அவரைக் கொன்றுவிட வேண்டுமென்று நண்பர்களுடன் கலந்து முடிவுசெய்தான். துப்பாக்கி என்னுங் கொலைக்கருவியுடன் காந்தியடிகள் தங்கியிருந்த டில்லிக்குச் சென்றான். காந்தியடிகள் நாள்தோறும் பொது மக்களுடன் சேர்ந்து இறைவனை வழிபடும் இடத்திற்குச் சென்றான். அங்கே பொதுமக்கள் கூடியிருந்தார்கள். காந்தியடிகளும் தாம் தங்கியிருந்த பிர்லாமாளிகை என்னுங் கட்டிடத்தைவிட்டுப் புறப்பட்டுப் பொது மக்கள் தங்கியிருந்த இடத்தை நோக்கிவந்தார்.

நயவஞ்சகனும் கொலைப்பாதகனுமாகிய விநாயக காட்சே காந்தியடிகளுக்கு முன்னாற் சென்றான்;

கையைக் குவித்துக் கும்பிட்டான். காந்தியடிகளும் எதிர்வணக்கஞ் செய்தார். தீவினையாளன் கீழேகுனிந்து நிமிர்ந்தான். "டப் டப் டப்" என்று துப்பாக்கி வெடி எழுந்தது. கொடியோனாகிய விநாயககாட்சே, காந்தியடிகளின் தூயபொன்னுடலில் மூன்று குண்டுகளைச் சுட்டுத் தொளைத்துவிட்டான், காந்தியடிகள், உடல் சுருண்டு, 'ராம் ராம்' என்னும் சொல்லுடன் நிலத்தில் விழுந்துவிட்டார். அருகிலிருந்தவர்கள் கொலையாளியைப் பிடித்துக்கொண்டார்.

இருப்பிடத்திற்குக் கொண்டு செல்லப்பட்ட காந்தியடிகள் இறைவன் திருவடியை அடைந்தார். கொலையாளனாகிய விநாயககாட்சே போலீசாரிடம் சேர்ப்பிக்கப் பட்டான். குவித்து வணங்குங் கைக்குட்கூடப் பகைவர்கள் படைக்கலத்தை மறைத்து வைத்துக் கொண்டிருப்பார்கள் என்பதற்கு, இத் தீயவனே தகுதியான எடுத்துக்காட்டாக அமைந்தான்.

> தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
> அழுதகண் ணீரும் அனைத்து.

**கூடாநட்பு, செய். 8.**

(இ - ள்.) பகைவர் குவித்து வணங்கிய கைக்குள்ளேயும், கொலை செய்யும் படைக்கலமானது மறைந்திருக்கும். அவர் நம் மாட்டு அன்புடையார் போன்று நயவஞ்சகமாக அழுகின்ற கண்ணீரும், அப்படியே அது மறைந்திருத்தற்கு இடமாகும்.

## ௯௧. அறிவிலிகளும் ஔவையாரும்

ஒருகால் ஔவையார் ஒரு காட்டின் வழியே சென்றுகொண்டிருந்தார். அப்பொழுது சில அறிவிலிகள் ஔவையாரைக் கண்டனர். ஔவையார் பாட்டுப் பாடுவதில் நாட்டிற் சிறந்தவரென்று அவ்வறிவிலிகள் உணர்ந்தனர். தாங்களும் ஔவையார் வாக்காற் பாட்டுப் பெறுவதற்கு அதுதான் தக்க சமயம் என்று முடிவுசெய்தனர். தங்கள்மீது ஒரு செய்யுள் இயற்ற வேண்டுமென்று கூறினர். ஔவையார் அவ்வறிவிலிகளின் வேண்டுகோளுக்கு இணங்கவில்லை. அறிவிலிகள் ஔவையார் மேலே செல்லாதவாறு தடைபுரிந்து வருத்தவுந் தொடங்கினர். ஏதாவது பாடினால் அல்லாமல் அவர்களிடமிருந்து தப்பிச்செல்லுதல் இயலாதென்று கண்டார். இழித்துப் பாடுதலே தக்கது என்று முடிவுசெய்தார். அவர் உடனே, "மூவர்கோவையும் மூவிளங்கோவையும், பாடிய என்றன் பனுவல் வாயால், எம்மையும் பாடுக என்றனிர் நும்மையிங்கு, எங்ஙனம் பாடுகேன் யானே வெங்கண், களிறுபடுசெங் களங் கண்ணிற் காணீர், வெளிறுபடு நல்யாழ் விரும்பிக் கேளீர், புலவர் வாய்ச்சொல் புலம்பலுக்கு இரங்கீர், ......................அவிழ்ச் சுவையல்லது தமிழ்ச்சுவை தேரீர், உடீஇர் உண்ணீர் கொடீஇர் கொள்ளீர், ஔவாக் கானத் துயர்மரம் பழுத்த, துவ்வாக் கனியெனத் தோன்றிய நீரே" என்று பழித்துப் பாடினார்.

ஔவையார் தாம் பாடிய இப் பாடலில் அவ்வறிவிலிகளின் சிறுமையை விளக்கிக் காட்டியுள்ளாராயினும், அறிவிலிகளாதலால் பாடலின் பொருள் யாதும் அவர்கட்குத் தெளிவாக விளங்கவில்லை. அப் பாட

லால் தமக்கு இழிவே ஏற்படுமென்பதை உணராத அவர்கள், ஔவை வாக்கால் நாமும் பாடல் பெற்றோ மென்று மகிழ்ச்சியடைந்து ஔவையாரைப் போகவிட் டனர். ஔவையாரிடத்தில் சிறுமையைப் பெற்றுக் கொண்டு பெருமையை இழந்த அவ் வறிவிலிகளின் செயலைக்கண்டு பலரும் எள்ளிநகையாடினர். இவ்வாறு நன்மையை இழந்துவிட்டுத் தீமையைப் பெறுதலே அறிஞர்களால் பேதைமை என்று கூறப்பெறுவ தாயிற்று.

பேதைமை யென்பதொன் றியாதெனின் ஏதங்கொண்
டூதியம் போக விடல்.

**பேதைமை, செய். 1.**

(இ - ள்.) அறிவின்மை என்று சொல்லப்படுவதாகிய ஒரு பண்பு யாதென்று கேட்டால், தனக்குச் சிறுமை பயப்பவைகளைப் பற்றிக்கொண்டு, நன்மை பயப்பவைகளை இழந்து விடுதலாகும்.

## ௬௭. மாட்டுவண்டிக்காரர்களின் மடமை

சில கட்டைவண்டிக்காரர்கள் கட்டைவண்டி களிற் கரிமூட்டைகளை ஏற்றிக்கொண்டு சென்றார்கள். வண்டி நிறையக் கரிமூட்டைகள் ஏற்றப்பெற்றிருந் தன. வண்டிக்காரர்கள் வண்டியை ஓட்டிக்கொண்டு சென்ற வழியில் பெரிய ஆறு ஒன்று இருந்தது. அதனுடைய அகலம் ஏறக்குறைய அரைமைல் அளவு இருக்கும். ஆற்றைக் கடப்பதற்குப் பாலம் இல்லை. ஆற்றில் இறங்கித்தான் செல்லுதல்வேண்டும். ஆற்றில் தண்ணீர் ஓடுங்காலத்திற்கூட ஒருபக்கமாகச் சிறிது தான் ஓடும். மழைக்காலத்தில்தான் தண்ணீர் ஆறு நிறைந்து வரும். வண்டிக்காரர்கள் வண்டி ஓட்டிக் கொண்டு சென்றபோது ஆற்றின் ஒருபக்கத்தில்தான்

தண்ணீர் சென்றுகொண்டிருந்தது. ஆற்றில் நீர்ப் பெருக்கு வரக்கூடிய காலம். வண்டிக்காரர்கள் வண்டியை ஆற்றில் ஓட்டிக்கொண்டு சென்றார்கள். நடு ஆற்றில் போம்போது நடு இரவாகிவிட்டது. நடு ஆற்றில்தானே வண்டியை அவிழ்த்துவிட்டுத் தூங்கலாம் என்று முடிவு செய்தனர். வண்டிக்காரர்கள் அவ்வளவு அறிவுடையார்களல்லர். நட்டாற்றில் தங்குகிறோமே, நீர்ப்பெருக்கு வரக்கூடிய காலமாயிற்றே, எதிர்பாராதவாறு தண்ணீர்ப்பெருக்கு வந்துவிட்டால் என்ன செய்வது என்றும் எண்ணம் அவர்களுக்கு உண்டாகவில்லை. வண்டியை அவிழ்த்து விட்டுவிட்டுக் கோணிச் சாக்கை மணல்மீது விரித்துப் போட்டுவிட்டுப் படுத்து உறங்கினர்.

சில நாழிகைகளுக்கெல்லாம் வண்டிக்காரர்களுடைய உடலிற் குளிர்ச்சி தட்டியது. அவர்கள் திடுக்கிட்டு எழுந்தார்கள். நீர்ப்பெருக்கு வருவதைக்கண்டார்கள். விரைந்து வண்டியைக் கட்டிக்கொண்டு புறப்படத் தொடங்கினார்கள். பயனில்லை; நீர்ப்பெருக்கு அளவுகடந்து வந்தது; வண்டிகளையும் மாடுகளையுங் கரிமூட்டைகளையும் நீர்ப்பெருக்கு கடலைநோக்கி இழுத்துக்கொண்டு செல்லத்தொடங்கியது. வண்டிக்காரர்களும் மாடுகளும் உயிர் தப்புவதே அருமையாகிவிட்டது. வண்டிக்காரர்கள் மாட்டைக் கையிற்பிடித்து நீந்திக்கொண்டு பெருந் துன்பத்தோடு கரையேறினார்கள். வண்டிகளும் கரிமூட்டைகளும் மூலைக்குமூலை போய்ச் சேர்ந்தன. வண்டிக்காரர்கள் இவ்வாறு நட்டாற்றில் தங்கிப் பெருந் தொல்லைக்குள்ளானதைக் கண்டு பலரும் இரங்கினார்கள். அறிவில்லாதவர்கள்

தங்களுக்குத் தாங்களே பெருங்கேட்டை விளைவித்துக் கொள்வார்களென்பதற்கு இவ் வண்டிக்காரர்களே எடுத்துக்காட்டானார்கள்;

அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்தல் அரிது

புல்லறிவாண்மை, செய். 3.

(இ - ள்.) நல்லறிவற்றவர்கள், தாமே தங்களுக்குச் செய்து கொள்ளும் வருத்தம், வருத்துதற்கெனவே அமைந்துநிற்கும் பகைவர்களாலும் செய்ய முடியாததாகும்.

## ௬அ. இகலில் மிகுந்த இட்லர்

இட்லர் என்பவன் செர்மனி நாட்டிலே சில ஆண்டுகள் தன்மனம் போனவாறு கொடுங்கோலரசு புரிந்து வந்த ஓர் ஆண்மையாளன். சூழ்ச்சியாக ஆட்சி புரிவதில் மாட்சி பெற்றவன். வெறும் மிரட்டல் ஒன்றைக் கொண்டே தன்மனம் போனவாறு எதையும் நிறைவேற்றிக் கொள்வதில் அவன் மிகவும் திறமைவாய்ந்திருந்தான். நாட்டின் பாதுகாப்புக்காகப் பல அருஞ் செயல்களைச் செய்திருந்தான். வீழ்ச்சியடைந்து தாழ்ச்சி மிகுந்து கிடந்த செர்மனி நாட்டைத் தலைதூக்குமாறு செய்த அவனைப் பலர் பெரிதும் போற்றினர். அவன் ஓர் அளவாக அமைந்திருப்பானுனல், இன்று சிறந்த நிலையில் திகழ்ந்திருப்பான். அவனுடைய பேரவாவே அவனுக்குக் கேடுசூழத் தொடங்கியது. அண்மையிலிருந்த நாடுகள் சிலவற்றைத் தன் நாட்டோடு சேர்த்துக்கொண்டான். ஆற்றலற்ற நாடுகளை அடிமைகளாக்கினுன். உலகம் முழுவதையும் செர்மனி நாட்டிற்குக் கீழ்ப்படிந்த நாடாகச் செய்யவேண்டுமென்று

முடிவு செய்தான். தன் எண்ணத்தை நிறைவேற்றத் தொடங்கினான்.

நிறைவேற்றத் தொடங்கியவன் ஒழுங்கும் முறையும் இல்லாமல் செயல்களை ஆற்றினான். தன் படைப் பலத்தையே பெரிதாக எண்ணினான். உலகம் முழுவதையும் ஒரு நொடிக்குள், வெற்றிகொள்ளத்தக்க பெற்றி தன்பால் அமைந்திருக்கின்றது என்று பெருமுழக்கஞ் செய்தான். அமெரிக்கா, இங்கிலாந்து, ருசியா முதலிய பல நாடுகளையும் பகைத்தான். 'பகையை நான் ஒரு பொருட்படுத்தவில்லை. எவ்வளவு பகையுண்டானாலும் அஃது எனக்கு மிகவும் இனிதேயாகும்' என்று குதித்தான்.

ஆணவம் மிகுந்து செருக்கித் திரிந்த இட்லர் இறுதியிற் போர்த்துறையில் இறங்கினான். அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய நாடுகள் ஒன்றுசேர்ந்து இட்லருக்குப் "பட்பட்" என்று உதைகள் கொடுக்கலாயின. ருசியா ஒரு பக்கம் இட்லருக்குப் பெருந்தொல்லை கொடுத்துத் தாக்கத் தொடங்கியது. இட்லரின் பகைவர்கள் அனைவரும் இதுவே தகுந்த சமயம் என்று இட்லர்மீது பாய்ந்து தாக்கினர். செர்மனி நாட்டின் தலைநகராக அமைந்திருந்த 'பெர்லின்' என்னும் நகரம் அழிந்தொழிந்தது. அளவற்ற மக்கள் மாண்டு மடிந்தார்கள். எல்லா வற்றிற்கும் மூலமாக நின்ற இட்லர் போனவகை தெரியவில்லை. இறந்தொழிந்தோ அல்லது பறந்து எழுந்தோ தொலைந்து போனான். அவன் இறந்ததும் உயிருடன் இருப்பதும் உலகிற்குத் தெரியாது போயிற்று. அவனால் உண்டாகிய இரண்டாவது உலகப் பெரும்போரும் முடிந்தது. 'இகலில் மிகல் இனிது என்பவன் வாழ்க்கை

தவலும் கெடலும் நணித்து' என்பதை உலகம் அந்த இட்லர்பால் அறிந்துகொண்டது.

இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

**இகல், செய். 6.**

(இ - ள்.) பிறரோடு மாறுபடுதலிலே மிகுதல் எனக்கு மிகவும் இனியதாம் என்றியம்புவோனது வாழ்க்கை, தவறுபாடடைதலும், அடியோடழிதலும் மிக விரைவிலேற்படுவதாம்.

## ௯௩. குணமற்றுக் குற்றமுற்ற துரியோதனன்

துரியோதனன் நற்குணங்கள் சிறிதும் இல்லாதவன். புல்லிய குணங்களே அவனைப் புல்லி நின்றன. நல்லியல்புகள் சிறிதும் இல்லாத அவன் குற்றங்களில் மட்டும் மிகுந்து நின்றான். அவன் தன் உடன்பிறந்தார்களாகிய பாண்டவர்களையே தனக்குப் பெரும் பகைவர்களாக மதித்து நின்றான். அவர்கட்குப் பல தொல்லைகள் புரிந்து அவர்களை ஒழித்துவிடவே முயன்றான். துரியோதனன் பாண்டவர்கட்குப் புரிந்த இழிசெயல்கள் பாண்டவர்களின் பகைவர்களாற்கூட வெறுத்தொதுக்குமாறு நின்றன. அதனால், பலர் துரியோதனனுக்கு உதவி செய்யவில்லை. அனைவரும் துரியோதனனுக்குப் போக்குக் காட்டிவிட்டுப் பாண்டவர்களின் பக்கமே திரண்டு நின்றனர். போரில் துரியோதனனுக்கு உதவிசெய்ய விதுரன் உறுதிகொண்டு நின்றான். விதுரன் போராண்மை மிக்கவன். அவனுடைய போராண்மை எல்லோராலும் புகழ்ந்து பேச நின்றது. அவன் போரில் வில்லெடுத்திருப்பானாகில் அவனை வெல்ல ஆயிரம் அருச்சுனர்களாலும் இயலாது. அத்

தகைய பேராண்மையாளனைத் துரியோதனன் 'தாதி மகன்' என்று இழித்துரைத்து அவனுடைய உதவியையும் போக்கிக்கொண்டான்.

துரியோதனன் குற்றம் புரிதலையே தன்னுடைய இயற்கைக் குணமாகக்கொண்டு ஆண்மையாளர்களின் உதவியையும் இழந்து நின்றது பாண்டவர்கட்கு மிகவும் நன்மையாக முடிந்தது. தகுதிவாய்ந்தவர்கள் பலரும் பாண்டவர் பக்கம் சார்ந்து நிற்றலையுந் தான் தன்னுடைய தீக்குணத்தால் பாதுகாப்பை இழந்து பாண்டவர்கட்கே பாதுகாப்பைத் தேடித் தந்திருத்தலையும் உணர்ந்தே போரைத் தொடங்கினான். மிகுவிரைவில் தன்னுடைய உடன்பிறந்தார்களனைவரையுங் கூற்றுவன் உலகிற் குடியேற்றினான். தானும் அங்கேபோய்ச் சேர்ந்தான். பாண்டவர்கள் வெற்றி அடைந்து அரசை எய்தினர். குணமற்றவனாய்க் குற்றமுற்றவன் சுற்ற மற்றுக் கொற்றம் இழப்பான். அத்தகையோன் தன் பகைவர்க்கே ஆக்கந் தேடித்தந்தவன் ஆவான் என்பதை உலகம் துரியோதனன்பால் உணர்ந்தது.

குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனாம் ஏமாப் புடைத்து.

**பகைமாட்சி, செய். 8.**

**(இ - ள்.)** ஒருவன் நற்பண்புகள் சிறிதும் அற்றவனாய்ப் பல குற்றங்களும் பொருந்தியவனாக இருப்பானானால், அவன் தனக்குத் தகுந்த துணையற்றவனாவான். அத்தகையோன் தன்னுடைய பகைவர்களுக்குத், தன் குற்றங்களால்தானே பாதுகாப்புச் செய்தவனாவான்.

## ௩௦. புலவர் பகைகொண்ட புல்லன்

அவிநாசி என்பவர் ஒரு புலவர். அறிவாற்றலிற் சிறந்தவர். அவர் தமது பாவன்மையால் ஒருவரை வாழச்செய்யவும் தாழச்செய்யவும் வல்லவர். அறிஞர்களைப் பிடித்து வருத்தும் வறுமை அப் புலவரையும் அடுத்து வருத்தியது. அதனால், அவர் பலரிடமுஞ் சென்று இரத்தலை மேற்கொண்டு திரிந்தார். ஒரு முறை வேங்கடராமன் என்னும் பெருஞ்செல்வனிடஞ் சென்றார். அவன் பொருளாற்றலனாக இருந்தும் அருளற்றவனாக இருந்தான். இரப்போர்க்கு யாதுங் கொடா அப்பேதை இனிக்கப்பேசுவதில் வல்லவன். அப் புல்லன் அறிஞரோடு நெடுநேரம் வீணுரையாடினான். பகலுணவுவேளை வந்தது. புலவருக்கு யாதுங் கொடாமல், 'போய்விட்டு வாரும்; உம்மைப் போன்ற சோம்பேறிகட்குப் பொருளை வாரிக்கொடுப்பதற்கு இங்கொன்றுங் கொட்டிவைக்கவில்லை' என்று கூறிவிட்டுத் தீனியுண்ணற்குச் சென்றான்.

வேங்கடராமன் போக்கு அவிநாசிப்புலவருக்குக் கடுஞ்சினத்தை உண்டாக்கியது. வயிற்றெரிச்சல் மிகப் பெற்ற அவர், 'சீவன் உள்ளளவுமே நட்டுவக்காலியுந் தேளுஞ் சினந்துகொட்டத், திருதிரெனும் முண்டவிழியிற் குளவிகொட்ட அது செங்குருதி யாறுகொட்டப், பாவிமகனே! உனது வாசலில் சாம்பிணப் பறைகள் மிக வந்துகொட்டப், பந்தரடி மாரடித் துறவினர்கள் வாய்க்கரிசி படி நெற்கொணர்ந்துகொட்ட, ஆவலொடு கால்மாட்டில் உனது பெண்டாட்டி கண் அருவியொரு கோட்டைகொட்ட, ஐயையோ என் செய்வேன் என்று மகன் நீர்மாலை அதனைக்கொணர்ந்து கொட்டச், சாவடி

யில் அறுதலிகள் கூடி அழ நீ வந்து சப்பாணி கொட்டி யருளே, சண்டிக் குலாமகனே வேங்கட்டராமனே! சப்பாணிகொட்டி யருளே' என்று கொடிய இழிவுச் செய்யுள் ஒன்றைப்பாடிப் பலருக்குமுன் அரங்கேற்றஞ் செய்து அதனை உருவேற்றிவிட்டுச் சினத்துடன் சென்றார்.

புலவர் வாக்குப் பொய்யாமொழியுடையதாகலின் வேங்கடராமன் செல்வம் விரைவில் அழிந்தொழிந் தது. அவனும் இறந்து தொலைந்தான். அனைவரும் 'வேங்கடராமன் அவிநாசிப்புலவரின் பகையைத் தேடிக்கொண்டமையினால்தான் விரைவில் முடிந்து போனான்' என்று பேசிக்கொண்டார்கள். சொல் லேருழவர் பகை அல்லலை யளித்துத் தீமையைச் செய் வதாகும் என்பது இதனால் விளங்கும்.

வில்லே ருழவர் பகைகோளினுங் கோள்ளற்க
சோல்லே ருழவர் பகை.

**பகைத்திறந்தெரிதல், செய். 2.**

**(இ - ள்.)** வில்லை ஏராகவுடைய போர்மறவர்களோடு பகையைக் கொண்டாலும், சொல்லையே ஏராகவுடைய அறிஞர்களின் பகையை, ஒருவன் கொள்ளாதொழியக்கடவன்.

## ருக. உட்பகைகொண்ட கூனி

கூனி என்பவள் கைகேசியின் தோழி. மந்தரை என்னும் பெயரையுடையவள். அவளுடைய முதுகிலே கூனிருந்ததால் கூனியென்னும் காரணப்பெயரைப் பெற்றாள். நெடிய சூழ்ச்சியுங் கொடிய உள்ளமும் படைத்தவள். இராமபிரான் சிறு பிள்ளையாயிருக்கும் போது அரண்மனையை அடுத்துள்ள இடங்களில் இளையவரோடு வில்லை வைத்துக் குறிபார்த்துப் பொருள்களின்மீது செலுத்தித்தப்பாது படுதலைக் கண்டு மகிழ்வார். விளையாடும்போது கூனியானவள் அந்தப் பக்கங்களிற் சென்றால் சிறிய மண்ணுருண்டையை வில்லில்வைத்துக் கூனியின் கூனுக்குத் தக்கபடி குறிபார்த்துச் செலுத்தி விளையாடுவார். இராமர் விளையாட்டாகச் செய்யும் இச் செயல் கூனிக்கு மிகவும் இழிவாகத் தோன்றி மனவருத்தத்தை உண்டாக்கும். ஆயினும் அரசிளஞ்சிறுவனாக விளங்கிய இராமபிரானைக் குறித்து யாதுஞ் சொல்லவுஞ் செய்யவும் கூனியால் முடியவில்லை. இராமபிரானுக்குத் தீமை செய்வதற்குத் தகுந்த சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டேயிருந்தாள்.

கூனியின் உள்ளத்தில் எள்ளத்தனையாகத் தோன்றிய உட்பகை நாளுக்கு நாள் வளர்ச்சி பெற்றுக்கொண்டிருந்தது. அவ்வாறாக இராமபிரான் முடிசூடத்தக்க அகவையை அடைந்தார்; தசரதமன்னர் இராமபிரானுக்கு முடி சூட்டிவிட்டுத் தாம் தவஞ்செய்யும் பொருட்டுக் காட்டிற்குச் செல்ல எண்ணினார். அமைச்சர்களைக் கலந்து ஆராய்ந்தார். ஆவன செய்யப் பெற்றன. இராமபிரான் முடிசூடப்போகுஞ் செய்தி

யாண்டும் பரவியது. மக்கள் மிகுந்த மகிழ்ச்சியை யடைந்தனர்.

உட்பகை கொண்ட கூனியோ இராமபிரானுக்குத் தீமைபுரிதற்குத் தக்ககாலம் வந்துவிட்டது என்று எண்ணினாள். கைகேசியிடஞ் சென்று அவள் உள்ளத்தை மெள்ளக் கலைக்கத் தொடங்கினாள். முதலில் மனந் திரியாத கைகேசி கூனியின் ஈனமொழிகட்கு இறுதியில் இணங்கினாள். இராமபிரானுக்கு முடிசூட்டுவதைத் தடுத்துக் காட்டுக்கு அனுப்பிவிட்டுத் தன் மகன் பரதனுக்கு முடிசூட்டுமாறு தசரத மன்னனை வற்புறுத்தினாள். பிறகு நிகழ்ந்த செயல்கள் எல்லாவற்றிற்கும் கூனியின் உட்பகையே மூலகாரணமாக அமைந்து நின்றது.

எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும்
உட்பகை உள்ளதாங் கேடு.

**உட்பகை, செய். 9.**

(**இ - ள்.**) தம்மைச் சேர்ந்தவர்களுக்குள் தோன்றும் பகையானது, எள்ளின் பிளவையொத்த சிறிய அளவோடு கூடியதாக இருந்தாலும், அதனால், ஒருவனுக்குக் கேடு தவறாது உளதாதல் கூடும்.

## ருஉ. இந்திரனும் குருவும்

ஒருநாள் வியாழபகவான் இந்திரனுடைய அவைக் களத்திற்குச் சென்றார். அவர் இந்திரனுடைய குரு. இந்திரனுடைய அவைக்களத்திலே பலவகையான ஆடல்பாடல்கள் நிகழ்ந்துகொண்டிருந்தன. இன்பக் களியாட்டத்திலே உள்ளத்தைச் செலுத்திக் களித்திருந்த இந்திரன் தன்னுடைய ஆசிரியரைக் கண்டதும் எழுந்து வணங்கவில்லை. ஆசிரியரை ஒரு பொருட்படுத்தாமல் இறுமாந்திருந்தான். இந்திரனுடைய நிலையைக்

கண்ட வியாழபகவான் உள்ளம் வருந்தினர். அவைக் களத்தைவிட்டு எழுந்து விரைவாகச் சென்றுவிட்டார்.

ஆசிரியரைப் போற்றாத இந்திரனுடைய செல்வ நலம் குன்றத்தொடங்கியது. அதனல், மனம் வருந்திய இந்திரன் தன்னுடைய ஆசிரியரைத்தேடிப்பார்த்தான். அவர் எங்கும் அகப்படவில்லை. அசுரர்களின் குருவாகிய விச்சுவவுருவன் என்பவனைத் தனக்கு ஆசிரியனுகக் கொண்டு ஆகவேண்டிய செயல்களைப்புரியத்தொடங்கினுன். அசுரகுருவாகிய விச்சுவவுருவன் செம்மையான உள்ளம் படைத்தவனல்லன். உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுபவன். அவனைக்கொண்டு இந்திரன் ஒரு வேள்வியைச் செய்யத்தொடங்கினுன். அந்த வேள்வியிலே அசுரர்களுக்கு நன்மையுண்டாகுமாறு விச்சுவவுருவன் காரியங்களைப் புரிந்தான். அச் செய்தி இந்திரனுக்குத் தெரிந்தது. அவன் உடனே தனது படைக்கலத்தை யெடுத்துத் தனக்கு ஆசிரியனுக அமைந்து நின்ற விச்சுவவுருவனைக் கொன்றுன்.

ஆசிரியனைக்கொன்ற அளவில் இந்திரனைக் குற்றம் பற்றியது. இந்திரன் பல இடங்களினும் ஓடியொளிந்து பலவாறு தொல்லைப்பட்டான். அவன் அடைந்த அல்லல்கள் எல்லாவற்றிற்கும் தன் ஆசிரியராகிய வியாழபகவானைப் போற்றுமையே காரணமாக அமைந்து நின்றது.

ஒருவன் பெரியாரைப் போற்றுமல் நடப்பானுயின் அப் பெரியாரால் அவனுக்குப் பல கொடுந் துன்பங்கள் உள்ளனவாகும் என்பதை உலகிற்கு உணர்த்திநின்றுன் இந்திரன். ஆகவே, நாம் ஒவ்வொருவரும் பெரியோ

ரிடத்தில் தவறுசெய்யாமல் அவர்களைப் போற்றி ஒழுக வேண்டியது கடமையாகும்.

பெரியாரைப் பேணு தொழுகில் பெரியாரால்
பேரா இடும்பை தரும்.

**பெரியாரைப்பிழையாமை. செய் 2.**

(இ - ள்) ஒருவன் தன்னினும் பெரியாரைப் போற்றி நடவாமல் இகழ்ந்து நடப்பானாயின், அந்தப் பெரியாரால் பல துன்பங்களை அடைவான்.

## ருங. பெண்வழிச் சென்றபேதை

பல்லாண்டுகட்கு முன்பு ஓர் ஊரிலே ஒரு குடியானவன் இருந்தான். அவன் பல ஏர்களையுடையவனாய் முயன்று தொழில் புரிந்து மிகுந்த பொருள் திரட்டினான். அவனுக்கு மனைவியாக அமைந்தவள் நற்குண நற்செய்கைகள் அற்ற சூர்ப்பணகையாக இருந்தாள். அவள் தான் இட்டதே சட்டமென்று திட்டமாக்கி விட்டாள். குடியானவன் அஞ்சிய இயல்புடையவனாகையால் இல்லாள் சொற்படி இயைந்து நடந்தான். வெளியிற் குடியானவன் பலரையும் அடக்கி ஆண்டு மதிப்புடனிருந்தான். ஆனால், என்ன? வீட்டிற்குள் மனைவிக்கு அடங்கி அவள் சொல்வதைக் கேட்பவனாக இருந்தான்.

குடியானவன் ஒருநாள் வயலுக்குச் செல்வதற்காக வெளியே வந்தான். ஔவைப்பிராட்டியார் பசியோடு திண்ணையில் அமர்ந்திருந்தார். உண்பதற்கு யாதேனும் இடுமாறு குடியானவனைப் பார்த்துக் கேட்டார். குடியானவன் திரும்பி வீட்டிற்குள்ளே சென்றான். இல்லாளுக்கு இனிமையான செயல்கள் பலவற்றைச் செய்தான். பிறகு, அவளைப் பார்த்து,

கிழவி ஒருத்தி பசியோடு திண்ணையில் படுத்திருக்கிருள். அவளுக்குச் சிறிது உணவிடுதல் வேண்டும்— என்று வேண்டிக்கொண்டான். அவன் மனைவிக்குக் கீழ்ப்படிந்து நடப்பவனுக இருந்தபடியால், 'உணவிடு'—என்று மனைவிக்குக் கட்டளையிட அவனுல் முடியவில்லை.

கணவன் மொழிகளைக் கேட்ட அளவில் அக் கொடியவளுக்கு மிகுந்த சீற்றமுண்டாகிவிட்டது. அவள் தன் கணவனைப் பார்த்து, 'அடா பேதையே! நீ கெட்ட கேட்டிற்கு விருந்து ஒன்றுதான் குறைவாக இருக்கிறதோ? துணிந்து இதனை என்னிடம் சொல்வதற்கும் வந்தாயே! நீ மிகவும் கெட்டிக்காரன்தான்!' என்று கூறிப் பெரு முழக்கஞ்செய்துகொண்டே முறத்தை யெடுத்து விரட்டி விரட்டி அடித்தாள்.

எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்த ஒளவையார் அந்தக் குடியானவன் தன் மனைவிக்கு அஞ்சி அவளிடம் படும்பாட்டைக் குறித்து இரங்கிஞர். 'இவ்வாறு இல்லாளுக்கஞ்சி அவள் குறிப்பின் வழியே நடந்து கோழையாக இருப்பதைப் பார்க்கினும் இல்வாழ்வைத் துறந்து துறவியாகச் சென்றுவிடலாம்,' என்று அவனுக்கு அறிவுரை கூறிஞர். அவனும் துறவியாகி நன்மை அடைந்தான்.

இல்லாளை அஞ்சுவான் அஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்.

பெண்வழிச்சேறல், செய். 5

(இ - ள்.) தன் மனைவிக்கு அஞ்சுகிறவன், நல்லவர்களுக்கு நன்மைகளைப் புரிதற்கும் எந்தக் காலத்திலும் அச்சத்தை யடைவான்.

## ௫௯. நடுத்தெருவிற் கிடந்த நாராயணன்

மாங்குடி என்னும் ஓர் ஊரிலே நாராயணன் என்ற பெயருடைய ஒருவன் இருந்தான். அவன் உயர்ந்த குடியிலே பிறந்தவன். தாழ்ந்த குடியிலே பிறந்த சிலரின் கூட்டுறவை அவன் கொண்டிருந்தான். அவர்கள் கட்குடித்தல், சூதாடுதல், புகைகுடித்தல் முதலிய இழிதொழில்களிலே அழுந்திநின்றனர். அவைகளை யெல்லாம் உயர்குடித் தோன்றிய நாராயணனுக்கும் நன்கு பழக்கிவிட்டனர். உயர்குடியில் தோன்றிய நாராயணன் உயர்ந்த குடியனாக விளங்கினான். நாளடை வில் அவனுடைய கட்குடி வளர்ந்துகொண்டேவந்தது.

ஒருநாள் நாராயணன் அளவுகடந்து குடித்துவிட் டான். அதனால் அவனுடைய அறிவுநிலை திரிந்து விட்டது. அவன் நடுத்தெருவில் விழுந்துவிட்டான். மாலைநேரமாகையால் தெருவில் மக்கள் நடமாட்டம் மிகுதியாக இருந்தது. விழுந்துகிடந்த நாராயண னுடைய உடை அவிழ்ந்துபோய்விட்டது. தெருவிற் சென்ற பலரும் நாராயணனைப் பார்த்து, எள்ளி நகை யாடிக் கொண்டே சென்றனர். சிலர் உயர்குடியிற் பிறந்த இவன் இவ்வாறு உயர் குடியில் அகப்பட்டுக் கொண்டு பெருமை இழக்கின்றானே என்று உரிமை யுடன்வருந்தினர். ஆனால்,எவரும்நாராயணனை அப்புறப் படுத்தி அவனுடைய மானத்தைக் காக்க முன்வரவில்லை.

நீண்டநேரம் விழுந்துகிடந்த நாராயணன் பிறகு தெளிந்தெழுந்தான். தான்விழுந்துகிடந்தநிலைமையைக் கண்டான். தான் விழுந்துகிடந்த இடத்தைப் பார்த் தான். அவன் உயர்குடியிற் பிறந்தவனாதலால் இயற் கையாக அமைந்துநின்ற நாணம் எழுந்து கிளர்ந்து

கின்றது. "நாம் குடி யென்னும் கொடிய பழக்கத்தில் அகப்பட்டபடியால்தான் இவ்வாறு நாணமற்று நடுத் தெருவிற் கிடக்க நேர்ந்தது. நாம் கிடந்தபொழுது எத்தனைபேர் நம்மைப் பார்த்து இகழ்ந்து சென்றார் களோ, அவர்களுடைய முகங்களிலே நாம் இனிமேல் எவ்வாறு விழிக்கப்போகிறோம்," என்று எண்ணி வருந் தினான்.

நாணென்னும் நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணுப் பெருங்குற்றத் தார்க்கு.

கள்ளுண்ணாமை, செய். 4.

(இ - ள்.) கள் என்று சொல்லப்பெறுகிற, யாவரும் இகழும் மிகுந்த குற்றத்தையுடைய பொருளை உண்டவர்க்கு, வெட்கம் என்று சொல்லப்பெறுகிற நல்லவள் எதிர்முகப்படாது விலகு வாள்.

## ருரு. மாணவர்களும் சூதாட்டமும்

ஓர் உயர்நிலைப் பள்ளியிலே பல மாணவர்கள் படித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களிற் சிலர் சூதாடுந் தீதான வழக்கத்தை மேற்கொண்டிருந்தார் கள். பள்ளிச் சம்பளத்துக்காக வீட்டில் வாங்கி வந்த பொருளைச் சூதிலே செலவிட்டார்கள். சூதிலே பழகிய மாணவர்களுடைய உள்ளம் கல்வியிலே சிறிதுஞ் செல்ல வில்லை. பள்ளிக்கூட, நேரம்போக எஞ்சிய பொழுதை யெல்லாஞ் சூதாடுவதிலேயே கழித்துவந்தார்கள்.

ஒருநாள் இரவு மாணவர்களும் மற்றும் பலருஞ் சேர்ந்து ஒரு வீட்டிலே சூதாடினார்கள். சூதாடுமிடத் தில் சூதில் வைப்பதற்குப் பல பொருள்கள் இருந்த துடன், எல்லாரிடமும் பணமும் இருந்தது. நள்ளிரவிற்

சூதாட்டம் மிகுந்த மகிழ்ச்சியுடனும், ஊக்கத்துடனும் நடைபெற்றுக் கொண்டிருந்தது. மாணவர்களும் பிறருஞ் சேர்ந்து சூதாடுகிறார்கள் என்னுஞ் செய்தி ஊர்க்காவலர்கட்கு (போலீசாருக்கு)த் தெரிந்தது. ஏழெட்டுப் போலீசார்களும் அவர்களுடைய தலைவரும் வீட்டைச் சூழ்ந்துகொண்டனர். யாரும் வீட்டை விட்டு ஓடிப்போகாதவாறு வளைத்துக் கொண்டார்கள். அவ்வாறு வளைத்துக்கொண்டதால் எல்லாருஞ் சிக்கிக் கொண்டனர். மறுநாள் போலீசார், சூதாடியவர்கள் அனைவரையும் அறமன்றத் தலைவர் முன்பு கொண்டு போய் நிறுத்தி, எல்லாருஞ் சூதாடியதாக வழக்குப் பதிவு செய்தனர். அறமன்றத் தலைவர் தக்க சான்றுகளை வைத்துக்கொண்டு உசாவினார். அனைவர்மேலுங் குற்றம் ஏற்பட்டது. எல்லோரும் ஒறுப்புப்பணம் இறுக்குமாறு முடிவு கூறினார்.

மாணவர்கள் சூதாடினர் என்னுஞ் செய்தி எங்கும் பரவியது. மாணவர்களைப் பலரும் இகழ்ந்துரைத்தனர். சூதாடியமாணவர்களின் பெயர் நாளிதழ்களிலும் வெளிவந்தது. உயர்நிலைப்பள்ளியின் தலைமையாசிரியர் சூதாடும் மாணவர்களாற் பள்ளிக்கூடத்திற்குக் கெட்டபெயர் ஏற்படுகிறதென்று அவர்களைக் கல்விச்சாலையை விட்டு விலக்கிவிட்டார். பிற கல்விச் சாலைத் தலைவர்களும் அம்மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளவில்லை. அதனால் அம்மாணவர்கள் கல்வியை இழந்து கல்வியால் ஏற்படக்கூடிய, உடை, செல்வம், ஊண், ஒளி என்னும் பிறவற்றையும் இழந்து வருந்தலானார்கள். ஆகையால், தீமைகள் பலவற்றைப் பயக்குஞ் சூதினை ஒருவரும் மேற்கொள்ளுதல் கூடாது.

உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன் றைந்தும்
அடையாவாம் ஆயங் கொளின்.

சூது, செய். 9.

(இ - ள்.) ஒருவன் சூது விளையாடுந் தொழிலை மேற்கொள்வானாயின், உடையும், பொருளும், உணவும், புகழும், கல்வியறிவும் ஆகிய ஐந்தும் அவனைச் சேரமாட்டாவாம்.

## ருகசு. பெருந்தீனியுண்ட பேதை

ஒரு செல்வன் உண்டியைக் கண்டபடி உண்ணுதலிலே தலைசிறந்து நின்றான். பேருண்டியைப் பெருவிருப்புடன் அவன் உண்டமையால் அவனுடைய கால் கைகள் அளவுகடந்து வீட்டுத் தூண்களைப்போலப் பருத்துப்போயின. வயிறோ குதிர்போல அமைந்துவிட்டது. நாளடைவில் அவனைத் தூக்கி விடுதற்குக் கூட ஆட்கள் வேண்டியதாகிவிட்டது. பல நோய்கள் உடலிற் புகுந்துவிட்டன. அந்நோய்களைத் தீர்க்க மருத்துவர்கள் பலர் வந்தார்கள். நோய்களைத் தீர்க்க அவர்களால் முடியவில்லை. இயன்றமட்டும் முயன்று பார்த்தார்கள். அவர்களால் தீர்க்க முடிந்தது செல்வனுடைய செல்வத்தைத்தான்.

இறுதியில் ஒரு சிறந்த மருத்துவன் வந்தான். அவன் நோயாளியினுடைய உடல் நிலைமையைக் கூர்ந்து நோக்கினான். 'உடலுக்கு வேலை கொடுக்க வேண்டும்; அல்லது உண்டியிற் பாதியைக் குறைக்க வேண்டும்' என்றான். செல்வனோ இரண்டுக்கும் இணங்கவில்லை. 'பேருண்டியுந் தின்னவேண்டும். வேலையுஞ் செய்யமுடியாது' என்றான். ஒருநாள் கண்டபடி பலவகை உணவுகளைச் செல்வன் தின்றுவிட்டான். அவைகள் சிறிதுஞ் செரிக்கவில்லை. அவ் வுணவுகள்

வயிற்றில் அப்படியே தங்கிவிட்டன. அதனால் அவன் திக்குமுக்காடிப் பேந்தப் பேந்த விழித்தான். மருத்துவன் பல மருந்துகளைக் கொடுத்துப்பார்த்தான். ஒன்றும் பயன் ஏற்படவில்லை. மருத்துவனுக்கு ஒரு சூழ்ச்சி தோன்றியது. செல்வனுடைய குதிரைவண்டியைப் பூட்டச் சொன்னான். வண்டி பூட்டப்பெற்றது. அதிற் செல்வனை ஏறிக்கொள்ளச்செய்து தானும் ஏறிக்கொண்டான்.

குதிரைவண்டி புறப்பட்டது. ஊருக்குப் புறம்பாக இரண்டு கல் தொலைவிலிருந்த ஓரிடத்திற்கு ஓட்டச் சொன்னான். வண்டிக்காரனும் அவ்வாறே ஓட்டினான். குறிப்பிட்ட இடத்தை அடைந்ததும், மருத்துவன் வண்டியிலிருந்து கீழே இறங்கினான். நோயாளியையும் இறங்கச் செய்தான். நோயாளியை அங்கு விட்டுவிட்டுத் தான்மட்டும் வண்டியில் ஏறிக்கொண்டு, வண்டியை ஓட்டச் சொன்னான். வண்டிக்காரனும் அவ்வாறே செய்ய, வண்டி செல்வனுடைய வீட்டை அடைந்தது. தனியாக விடப்பெற்ற செல்வன் ஒன்றுமறியாமல் திகைத்து நின்றான். மருத்துவன்மீது அவனுக்கு வருத்தமுண்டாயிற்று. ஆயினும், என்ன செய்வது? அவனால் விடப்பெற்ற இடத்திலோ மக்கள் நடமாட்டம் இல்லை. வேளையும் வெய்யில் வேளையாக இருந்தது. நடந்தே வீட்டிற்குச் சென்று விடுவதென்று செல்வன் முடிவு செய்தான். மெதுவாக நடந்து மாலையில் வீட்டை யடைந்தான். செரிக்காமல் வயிற்றிலிருந்த உணவு போனவிடந் தெரியவில்லை. பசி யென்பதை அன்றுதான் அவன் இன்னவாறிருக்கு மென்று முதன் முதலாக உணர்ந்தான். அன்றுமுதல் அவன் நாடோறுஞ் சிறிது தொலை நடக்கவும் உண

வைக் குறைத்துக் கொள்ளவும் முடிவுசெய்து அவ் வாறே ஒழுகி நலம் பெற்றான்.

தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும்.

மருந்து, செய் 7.

(இ - ள்.) தன் உடல் நிலையை நன்குணர்ந்து கொள்ளாதவனாகிப் பசியின் நிலைமைக்குத் தக்கவாறல்லாமல், மிகுதியாக உணவினை யுண்டால், அவ்வாறுண்டவனிடத்திலே நோய்கள் அளவில்லாமல் உண்டாகும்.

## ருஎ. பொய்க்கரி போகாப் பொன்னன்

புங்கனூர் என்னும் ஊரிலே பொன்னன் என்று பெயருடைய ஒருவன் இருந்தான். அவன் வறியவனும் அல்லன்; செல்வனும் அல்லன்; நடுத்தரமான நிலைமையிலே இருந்தான். சிறந்த குடும்பத்திலே பிறந்தவன். பொய் முதலிய பித்தலாட்டங்கள் அவனிடஞ் சிறிதும் இல்லை. அவன் எல்லோருடைய நம்பிக்கைக்கும் உரியவனாக இருந்தான். அவனுடைய ஊரிலே இருவர் மாறுபட்டுப் போரிட்டுக்கொண்டார்கள். ஒருவன் மற்றவனை நன்றாக அடித்துவிட்டான். அடிபட்டவன் நீதிமன்றத்திலே சென்று முறையிட்டுக்கொண்டான்.

நீதிமன்றத்தில் வழக்குத் தொடங்கியது. அடித்தவன் செல்வன்; அடிக்கப்பெற்றவன் வறியவன். செல்வன் பொன்னனை அழைத்து, 'நீ என் பக்கமாகச் சான்று பகர்தல் வேண்டும். அடிபட்டவன் கல்லில் மோதிக் காயத்தை யுண்டுசெய்து கொண்டதாகவும், அவனுடைய காயம் அடிபட்ட தல்லவென்றும் நீ கூறுதல் வேண்டும். அவ்வாறு நீ கூறுவதானால் நான் உனக்கு ஐந்நூறு ரூபாக்கள் தருகிறேன்' என்று

கூறினான். செல்வன் கூறியதைப் பொன்னன் ஒப்புக் கொள்ளவில்லை. 'பொய்க்கரி புகலுதல் என்றால் இயலாது. பொய்க்கரி கூறுவதற்கும் பொருள் வாங்கு தற்கும் நான் உடன்பட மாட்டேன்' என்று கண்டித் துக் கூறிவிட்டான். மேலும், ரூபாக்கள் மிகுதியாகத் தருவதாகவும் கூறிப் பார்த்தான். பொன்னன் இணங்கவில்லை. பிறகு செல்வன் அச்சுறுத்திப் பார்த் தான். பொன்னன் அதற்கும் ஒருப்படவில்லை.

பொன்னனுடைய நல்லியல்பு எல்லோராலும் போற்றப்பட்டுச் சிறப்படைந்திருந்தது. அது கெடாத வாறே பொன்னன் நடந்துகொண்டான். பொன்னன் இவ்வாறு மறுத்துவிட்ட செய்தி பலருக்குந் தெரிந்தது. அதனால் பொன்னன் மேலுஞ் சிறப்படைந்து விளங் கினான். பொன்னன் உயர்குடியிற் பிறந்தவனாகையால் தன்னியல்பு கெடாதவாறு ஒழுங்காக நடந்துகொண் டான் என்று பலரும் பொன்னனைப் போற்றினார்கள்.

பொன்னன் பொருளுக்கு அவாக்கொண்டு பொய்க் கரி போயிருப்பானாகில் அவனுடைய புகழ் அழிந்து போயிருப்பதுடன் குடிப்பிறப்பும் இழிந்துபோயிருக் கும். பொன்னன் அவ்வாறு செய்யாதபடியால், நற்குடி யிற் பிறந்தவர்கள் மிகுந்த பொருள் கிடைப்பதாயிருப் பினும் குடிப்பிறப்பு இழிவடைதற்கான செயல்களைப் புரியமாட்டார்கள் என்பதை உலகம் உணர்ந்து கொள்ளுமாறு செய்தவனானான்.

அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர்.

குடிமை, செய். 4.

(இ-ள்.) அளவு கடந்த பெருஞ்செல்வத்தைப் பெறுதற்குரிய நிலைமை யேற்படினும், உயர்ந்த குடியிலே பிறந்தவர்கள், தம்முயர்வு குறைவு படுதற்கான செயல்களைச் செய்ய மாட்டார்கள்.

## ருஅ. முதுகூத்தனார்

கடைச்சங்க காலத்திலே உறையூர் என்னும் ஊரிலே, முதுகூத்தனார் என்னும் பெயருடைய செல்வர் ஒருவர் இருந்தார். அவருக்கு மிகுதியான பொருள் இருந்தபடியால் சிறப்பாக வாழ்ந்திருந்தார். செல்வம் உடையவர்கள் பணிவுடைமையைத் தமக்கு உயரிய அணிகலமாகக் கொள்ளுதல்வேண்டும். அவ்வாறு கொள்ளுவார்களாயின் அவர்களுடைய செல்வப் பெருமை சிறப்படைந்து விளங்கும்சிறந்த செல்வராகத் திகழ்ந்திருந்த முதுகூத்தனார் செல்வநலத்தோடு அறிவு நலமும் மிகுந்தவராக இருந்தும் எல்லோரிடத்திலும் பணிவும் அடக்கமும் உடையவராகவே இருந்தார். அவருடைய உயரிய பண்பை அனைவரும் போற்றிப் புகழ்ந்து பாராட்டினார்கள்.

கால மாறுபாட்டினால் முதுகூத்தனாருடைய செல்வம் சிறிது சிறிதாகத் தேய்ந்தது. செல்வத்தினுடைய இயற்கையே அதுதானே. நாளடைவில் முதுகூத்தனார் மிகுந்த வறுமைநிலையை அடைந்தார். அதனாற் பலரும் முதுகூத்தனார் இன்னும் மிகுந்த பணிவும் அடக்கமும் உடையவராக ஆவார் என்று எண்ணினார்கள். ஆனால், முதுகூத்தனார் பணிவுடையவராக ஆகவில்லை. அதற்கு மாறாக மிகுந்த பெருமிதம் உடையவரானார். வறுமைக் காலத்திலே பணிவுடைமையைப் புலப்படுத்தினால் தம்மை எல்லோரும் இழிவாக மதிப்பார்கள் என்று எண்ணிய அவர் யாரையும் பொருட்படுத்தவில்லை.

அவர் அரிய செய்யுட்கள் இயற்றக்கூடிய நுண்மாண் நுழைபுலம் உடையவர். அக்காலத்திலிருந்த அரசர்களில் ஒருவர்மீது ஓர் அகவற்பாவைப் பாடிக்கொண்டு சென்றிருப்பாராயின், அவருடைய வறுமை இருந்தவிடந் தெரியாமற் பறந்திருக்கும். ஆனல், அதற்கு முதுகூத்தனர் முயலவில்லை.

ஒருநாள் சிலர் முதுகூத்தனரைக் கண்டு, 'தாங்கள் ஒருவர்மீது செய்யுள் செய்துகொண்டு சென்ருல் மிகுந்த சிறப்பை அடையலாமே! இவ்வாறு ஏன் வருந்திக் கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டார். அதற்கு முதுகூத்தனர், 'யான் செல்வச் சிறப்புடன் பெருமையாக விளங்கிக்கொண்டிருந்தபோதென்ருல் எவரையும் புகழ்ந்து பாடியிருப்பேன். என்னுடைய மனநிலை அப்பொழுது அவ்வாறிருந்தது. ஆனல், இப்பொழுதோ அவ்வாறில்லை. ஏனெனில், நான் ஒருவரைப் பொருளுக்காகப் பொருட்படுத்திப் புகழ்ந்துகொண்டு செல்வேனுயின் அவர்கள் என்னை இகழ்ந்துரைக்காவிடினும் உள்ளத்திலாயினும் இகழ்ச்சியாக எண்ணிக்கொள்வார்களாதலின் யான் அவ்வாறு செய்யமுடியாது,' என்று மறுத்துரைத்துவிட்டார்.

முதுகூத்தனர் மொழிகளைக் கேட்டோர் செல்வச் சிறப்புடைய காலத்திலேதான் பணிவுடைமை தக்கதாமேயன்றி வறுமைக் காலத்தில் தக்கதாகமாட்டாதென்று உணர்ந்து கொண்டார்கள்.

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு.

—மாணம், செய். 3

(இ - ள்) செல்வமுடைய காலத்திலே எவரும் பணிவு மிக்கவராக இருத்தல் வேண்டும். வறுமையை அடைந்த காலத்திலோ சிறுமைக்கிடங் கொடாமல் பெருமை தோன்ற நடந்து கொள்ளுதல் வேண்டும்.

## ருக. செம்மாந்திருந்த சிறியார்கள்

ஓர் அறிஞர் ஓர் ஊருக்குச் சென்றார். அங்கே 'இளைஞர் கழகம்' என்று அறிக்கைப் பலகை தொங்க விடப்பட்டிருந்த ஒரு கட்டிடத்தின் முன் பந்தல் அமைக்கப்பட்டிருந்ததுடன் அங்கு மக்கள் பலர் கூடியு மிருந்தனர். கழகத்தில் ஆண்டுவிழா நிகழ்கின்றதென் பதனை, அறிஞர் சிலரை உசாவியறிந்தார். 'விழாவிற் குச் சென்று சிறிதுபோது இருந்துவிட்டுச் செல்வோம். கழகத்தினரும் மிகவும் மகிழ்ச்சியடைவர்' என்று எண்ணியவராய்க் கழகத்திற்குச் சென்றார். அவர் பல நூல்கள் எழுதி மிகவுஞ் சீர்த்தி பெற்றவர். மக்களால் நன்கு மதித்துப் போற்றப்பட்டவர். கழகத்தில் அவ் வறிஞரை அறிந்தவர்களுஞ் சிலர் இருந்தனர். அறிஞர் கழகத்திற்குச் சென்று நின்றார். அவரை அனைவரும் பார்த்தனராயினும் யாரும் வாய் திறந்து 'உட்காருங் கள்' என்றுகூடச் சொல்லவில்லை. ஒரு சிறுவன், பாடம் ஒப்பிப்பதுபோல் எதையோ சொல்லிக்கொண் டிருப்பதைத்தான் கருத்துடன் கேட்டுக்கொண்டிருந் தனர்.

பேசிக்கொண்டிருந்த சிறுவன் உண்மையில் ஒரு பள்ளிமாணவனே, அவனுடைய ஆசிரியர் 'பெரியார் வழிபாடு' என்னும் பொருளைப்பற்றி எழுதிக் கொடுத் திருந்தார். மாணவன் அதனைத்தான் நெட்டுருச்செய்து பாடம் ஒப்பித்தலைப்போல அங்கு ஒப்பித்துக்கொண்

டிருந்தான். அப்பேச்சில் ஈடுபட்டிருந்த சிறியார்கள் அப்பெரியாரை வரவேற்றுப் போற்றி மகிழாமல் இறுமாந்திருந்தார்கள். அறிஞர் தம்மை அங்கு யாரும் பொருட்படுத்தாமையைத் தாம் ஒரு பொருட்படுத்த வில்லை. சிறிதுபோது அங்கு அமர்ந்திருந்துவிட்டு எழுந்து போய்விட்டார்.

அறிஞரை ஒருவர் பார்த்துக், 'கழகத்துக்குச் சென் றீர்களே ஏதேனும் ஒரு பொருளைப்பற்றிச் சொற் பொழிவு நிகழ்த்தி இளைஞர்களை மகிழ்விக்கக் கூடாதா?' என்று கேட்டார். அதற்கு அறிஞர், "மகிழ்விக்கலாம் அங்குள்ள சிறியார்கள் பெரியார் வழிபாடு என்னும் சொற்பொழிவில் ஈடுபட்டுவிட்ட படியால் என்னை ஏறெடுத்துப் பார்ப்பார் எவரும் இலர். நான் சிறிதுநேரம் இருந்துவிட்டு வந்துவிட் டேன்' என்றார். அதற்குக் கேள்வி கேட்டவர், 'அவர் கள் அவ்வாறிருந்ததற்குக் காரணம் யாது?' என்று வினவினார். அதற்குப் புலவர், 'பெரியாரைப் பேணித் தம்மவராகக் கொள்வோம் என்னும் நோக்கமானது சிறியார்களுடைய அறிவினிடத்திலே உண்டாக மாட்டாது' என்று தெய்வப் புலவர் தமது திருக்குற ளிலே தெரிவித்திருக்கிறார். அது பொய்யாமொழி யன்றோ? சிறியார்களுடைய அறிவிலே பெரியார் களைப் போற்றிக்கொள்வோம் என்னும் உணர்ச்சி எவ்வாறு உண்டாகும் ஆதலால்தான் அவர்கள் அவ்வாறிருந்தார்கள்" என்று பதிலுரைத்தார்.

சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னும் நோக்கு.

பெருமை, செய். 6.

(இ - ள்.) பெரியவர்கட்கு வழிபாடு செய்து அவர்களை நம்ம வர்களாகக் கொள்வோமென்னும் கருத்து, அறிவிற் சிறியராயி னரது எண்ணத்தின்கண் உண்டாகாது.

## ௯௰. சீரிய சால்புடைமையே சிறந்த செல்வம்

குமணமன்னன் சீரிய சால்புகள் செறிந்து நின் றான். அவனுடைய இளவல் நாட்டைக் கைப்பற்றிக் கொள்ள விரும்புகிறான் என்னுஞ் செய்தி குமணனுக் குத் தெரிந்ததும் நாட்டைத் துறந்து காட்டை யடைந்து மறைந்து திரிந்தான். காட்டில் மறைந்து திரியுங் காவலனிடம் பொருள் எப்படி யிருக்கும்? வறுமைதான் நிறைந்து நின்றது. பெருந்தலைச்சாத்த னார் என்னும் புலவர் பரிசில் பெறுவதற்காகக் குமண மன்னனைத் தேடிச் சென்றார். அரசன் நாட்டைத் துறந்து காட்டில் இருக்கின்றான் என்று அறிந்தார். விரைந்து சென்று குமணனைக் கண்டார். அவன் வறியநிலைமையில் இருப்பது புலவருடைய அறிவுக் கண்களுக்குப் புலப்படவில்லை. குமணமன்னனைக் கண்டதும் அவனுடைய சால்புடைமைதான் புலவருக் குத் தெரிந்தது. விரைந்து தன்னுடைய பாட்டைப் படித்தார். அரசன் கேட்டு மகிழ்ந்தான். புலவருக் குப் பரிசு கொடுக்கத்தக்க வழிதேடினான்.

புலவருக்குப் பரிசு கிடைத்தது. மன்னன் வழக் கம்போல் மன்னன் ஆனான். நாட்டைத் துறந்து ஒளிந்த மன்னன் மீண்டும் நாட்டை யடைந்து விளங்கு வதற்குக் குமணனுடைய சால்பென்னுந் திண்மையே காரணமாக அமைந்து நின்றது. குமணமன்னனிடத் தில் சால்பென்னுந் திண்மை யமைந்திராவிடின்நிகழ்ச்சி வேறுவகையாக முடிந்திருக்கும். நல்லோர்களுக்கு

இன்மை இழிவைத் தராது; சால்பென்னுந் திண்மைக் குணந்தான் தலைசிறந்து நிற்குமென்பதற்குத் தருமரும் தக்க எடுத்துக்காட்டாக அமைவர். தருமர் நாட்டை யிழந்து காட்டை யடைந்து வறுமையிற் புகுந்திருந்த போதிலும் அவருடைய சால்புடைமைக்கு எத்தகைய குறைபாடும் இல்லாதிருந்தது. அதனாற் பலருங் காட்டை யடைந்து தருமபுத்திரரையும் அவருடன் பிறந்தார்களையும் கண்டு மகிழ்ந்து சென்றனர். தருமர் அரசியலைத் துறந்து காட்டிலிருந்தபடியாலும் வறுமையில் வாடி நின்றமையாலும் எத்தகைய குறைவையும் அடைந்து விடவில்லை. ஆகவின், சால்பென்னுந் திண்மை யுடையவர்கட்கு இன்மையானது எத்தகைய குறைவையும் உண்டாக்கிவிடமாட்டாது.

இன்மை ஒருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

சான்றாண்மை, செய் 8.

(இ - ள்.) நல்லியல்புகளிலே நிறைந்திருத்தல் என்னுந் திட்பமானது உண்டாயிருப்பின், வறுமையானது ஒருவனுக்கு இழிவை உண்டாக்கமாட்டாது.

### ௪௨௧. காந்தியடிகள்

காந்தியடிகள் என்னும் பெரியார், இற்றைக்கு எண்பதாண்டுகட்கு முன்னர் வடநாட்டிலே பிறந்தார். கல்வியை நன்கு கற்றுத் தேர்ந்தார். நம்முடைய இந்தியநாட்டு மக்கள் இந்நாட்டிலும் பிறநாட்டிலும் ஆங்கிலேயர்களால் அடையுந் தொல்லை அவருடைய உள்ளத்தை வருத்தியது. மக்கட்கு நன்மை புரிதலையே தமது பிறவிப் பயனாகக்கொண்டார். தமது உடல்

பொருள் உயிர் முதலியவற்றை நாட்டு மக்களின் நன்மைக்கே இறுதிவரை பயன்படுத்தினார்.

இந்திய நாட்டையும் மக்களையும் அடிமைப்படுத்தி ஆண்டுவந்த ஆங்கிலேயர்கள், இந்நாட்டை விட்டுப் போதற்காகப் பெரும் போரிட்டார். அவருடைய போர் பிறவுயிர்கட்குத் தீமைபுரியாத அறப்போராக அமைந்து நின்றது. நாட்டுக்கும் மக்களுக்கும் நன்மை புரிய முயன்ற குற்றத்திற்காகப் பன்முறை சிறையில் அடைக்கப்பட்டார். ஆங்கிலக் கயவர்கள் சிலரிடம் அடியும் பட்டார். இழிகுலத்தினரென்று பழி மிகப் பெற்ற மக்கட்கு நன்மை புரிந்து அவர்களை உயர்ந்தவர்களாக்கி மற்றவர்களோடு சமமாகச் செய்து, 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமை யான்' என்னுந் தெய்வப்புலவர் திருவாக்கை மெய்ப்பிக்க அல்லும் பகலும் அரும்பாடுபட்டார். உள்நாட்டுச் சிறு கலகங்களால் திக்கற்றவர்களான மக்கட்கு அளவிடற்கரிய உதவியைப் புரிந்தார். இறுதியில் கீழ்மகன் ஒருவனால், ஊன்பயில் யாக்கையை ஒழித்து என்றும் அழியாப் புகழுடம்பு பெற்றார்.

காந்தியடிகள் தமக்கெனவாழாப் பிறர்க்குரியாளராகப் பேருலகிற் சிறந்து நின்றது, இந்த இந்தியநாட்டு மக்களின் உள்ளத்தையேயன்றி உலக மக்கள் அனைவருடைய உள்ளத்தையும் கவர்ந்தது. எல்லோருங் காந்தியடிகளைத் தெய்வமாகவே எண்ணிப் போற்றலாயினர். அமெரிக்கர்களும், ஆங்கிலேயர்களும், செர்மானியர்களும், சப்பானியர்களும், மற்றும் உலகத்திலுள்ள அனைவரும் காந்தியடிகளைப் போற்றிப் புகழுகின்றனர். காந்தியடிகளின் பெருமை இன்று

குன்றின் மேலிட்ட விளக்காக யாண்டும் நிகழ்கின்றது. நயனொடு நன்றிபுரிந்த பயனுடையார், பண்பு பாராட்டும்உலகு என்பதற்கு உலகம் காந்தியடிகளைப் போற்றுதலே உரிமை மிக்க எடுத்துக்காட்டாகும்.

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு.

பண்புடைமை. செய், 4.

(இ - ள்.) நன்மையையும் சிறப்பினையும் உலகிற்கு விரும்பிச் செய்த மேலான பயன்களையுடையவர்களது நல்லியல்புகளை, உலகத்தார்கள் போற்றுவார்கள்.

## ௯௨. நிலச்சுமையாய்த் தோன்றியவன் நீ

கடைச்சங்க காலத்துப் புலவர் ஒருவர் அந்நாளிற் சிறந்திருந்த குறுநிலமன்னன் ஒருவன்மீது அரிய செய்யுள் ஒன்றைப் பாடிக்கொண்டு சென்றார். அக் குறுநிலமன்னன் பெருநிலமன்னன் ஆவதற்காக முயற்சி செய்துகொண்டு, அதன்பொருட்டுப் பெரும்பொருளைத் தேடிப் பலவாறு தொகுத்துக்கொண்டிருந்தான். ஆகவே, அவன் புலவருக்குப் பரிசில் கொடுக்க விரும்பாமல், 'நான் இப்பொழுது என்னுடைய நாட்டைப் பெருக்குவதற்காகமுயற்சிசெய்துகொண்டிருக்கிறேன். இப்பொழுது உமது பாடலுக்குப் பரிசில் அளிப்பது இயலாது. ஆகையால், இப்பொழுது என்னிடம் பொருளை எதிர்பார்க்க வேண்டா. நானும் உம்முடைய புகழ்ப் பாடலை விரும்பவில்லை' என்று மறுமொழி கூறிவிட்டான்.

குறுநிலமன்னன் கூற்று புலவருக்கு வியப்பை அளித்தது. அவர் மன்னனைப் பார்த்து, அழிந்து போகுந் தன்மை பொருந்திய செல்வத்தைப் பெருக்கும்

பொருட்டு என்றும் அழியாத்தன்மை பொருந்திய புகழை விரும்பாதவனாக இருக்கின்றாய். தெய்வத் தன்மை பொருந்திய திருவள்ளுவ நாயனார் தம்முடைய திருக்குறளிலே, 'பொருளை மேலும் தொகுத்தற் பொருட்டுக் கையழுத்தம் செய்து சீர்த்தியை விரும் பாதவர்கள் உலகில் தோன்றியிருப்பது நிலத்திற்குச் சுமையாகும்' என்று இயம்பியிருப்பதை நீ உணர்வாயா? அவ்வாறுணர்ந்திருந்தால், 'நான் நாட்டைப் பெருக்கு வதற்கு இப்பொழுது முயற்சி செய்துகொண்டிருக் கிறேன். உம்முடைய பாட்டைக் கேட்க முடியாது. எனக்கு இப்பொழுது புகழ் வேண்டாவென்று கூறு வாயா? பொருள்தேட விரும்பிப் புகழைத் தேடா தொழியும் நீ நிலச்சுமையாகத் தோன்றியவன் என்றே நான் உறுதியாக எண்ணுகிறேன்,' என்று இகழ்ந்து பாடிவிட்டுச் சென்றார்.

புலவரால் வசைபெற்ற குறுநில மன்னன் இசை பெறாது போனதுமன்றி நாட்டைப் பெருக்கும் முயற்சி யிலும் தோல்வியடைந்து அழிந்தொழிந்தான்.

ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை

நன்றியில் செல்வம், செய். 3.

(இ - ள்.) பொருளைத் தொகுக்கும் பொருட்டுக் கையழுத் தஞ்செய்து, புகழை விரும்பாத ஆண்மகனது பிறப்பு, நிலத்திற் குச் சுமையே ஆகும்.

## ௯௩. குடியரை அப்புறப்படுத்திய குடியர்

ஓர் ஊரில் குடியர்கள் பலர் இருந்தார்கள். அவர்களனைவரும் குடியர்களாக இருந்து வந்தார்கள். குடியர்களாக இருந்தாலும் தற்பெருமை யடித்துக் கொள்வதிலும், எச்செயலையும் மதிப்பாகவும் பகட்டாகவும் செய்வதிலும் கண்ணுங் கருத்து முள்ளவர்கள். அவர்கள் குடிப்பதை யாருங் காண முடியாது. மிகவும் மறைவாகவே குடிப்பார்கள். தாங்கள் குடிப்பதே இல்லையென்றும், மிகவும் நல்லவர்களென்றுந் தம்பட்டம் அடித்துக்கொள்வார்கள். ஒருநாள் அக்குடியர்களிற் சிலர் அளவுக்கு மீறிக் குடித்துவிட்டுத் தெருவிலே புரண்டு கிடந்தார்கள். அவ்வாறு கிடப்பதை வேறு சில குடியர்கள் கண்டார்கள். அவர்களுக்கு மிகுந்த நாணம் உண்டாகிவிட்டது. இவர்களைப் பிறர் கண்டால் எல்லோரையும் ஒருங்குசேர இகழ்வார்கள். அவ்வாறு இகழவும் நகையாடவும் விடக்கூடாதென்று முடிவு செய்தார்கள். மிக விரைவில் தெருவிற் கிடந்த குடியர்களைத் தூக்கிக்கொண்டு மறைமுகமான இடத்திற் சேர்த்து மயக்கந் தெளியும்வரை பாதுகாத்தார்கள்.

குடியர்கள் அவ்வாறு தங்களுக்கும் தங்கள் நண்பர்கட்கும் இழிவுண்டாகாதபடி பாதுகாத்துக்கொண்ட செயலை ஒரு சிலர் உணர்ந்தார்கள். ‘குடியர்கள் குடியர்களாக இருந்தாலும் தங்கட்கு இழிவு ஏற்படாமற் பாதுகாத்துக்கொள்வதிற் கண்ணுங் கருத்துமாக இருக்கிறார்கள். தங்கட்கும் தங்களுடைய நண்பர்களுக்கும் இழிவேற்படாமல் பாதுகாத்துக்கொள்ளும் இவர்களன்றோ நாணத்திற்கிருப்பிடம்’ என்று பலரும்

புகழ்ந்துரைத்தார்கள். நாணம் மக்களுக்கு அழகை யளிப்பது. அதனைப் பாதுகாப்போர் சிறப்படைவார்கள். நாணத்தை விட்டவர்கள் பலராலும் எள்ளி நகையாடப்பட்டுச் சிறுமையை அடைவார்கள்.

பிறர்பழியுந் தம்பழியும் நாணுவார் நாணுக்(கு)
உறைபதி என்னும் உலகு.

நாணுடைமை, செய். 5.

(இ-ள்) பிறருக்கு வருகிற பழியையும், தமக்கு வருகிற பழியையும் ஒரே தன்மையாக நினைத்து வெட்கத்தை யடைபவர்களைப் பெரியோர்கள், வெட்கத்திற்கு இருப்பிடமென்று சொல்லுவார்கள்.

## ௯௬. முயற்சி மிக்க இளைஞன் உயர்ச்சி

பல்லாண்டுகளுக்கு முன் மதுரையில் ஒரு செல்வ மிக்க குடும்பம் சிறப்புடன் திகழ்ந்து நின்றது. குடும்பத் தலைவன் மடியின் வாய்ப்பட்டு வளங் குன்றி நின்றான். அதனால் செல்வம் தேயத் தொடங்கியது. சின்னாளில் செல்வம் முற்றும் மறைந்து போய்விட்டது. செல்வன் அதே கவலையினால் இறந்து போய்விட்டான். அவன் மனைவி மக்களுக்கு உண்ணவும் உணவுகூடக் குறைந்து போய்விட்டது. அச்செல்வனுக்கு மூன்று ஆண் மக்களும் மூன்று பெண்மக்களும் இருந்தார்கள். அம்மக்களைக் காப்பாற்றுவதற்குச் செல்வனுடைய மனைவி மிகுந்த தொல்லைப்பட்டாள். வீட்டிலிருந்த பொருள்களையும், நிலபுலங்களையும் விற்றுச் சிறிது காலம் போக்கினர்.

செல்வனுடைய மூத்தமகன் காளைப் பருவத்தை அடைந்தான். தனது குடும்பம் படுந் தொல்லையைக் கண்டு வருந்தினான். தனது குடும்பம் முன்னர் எந் நிலையில் இலங்கி நின்றதென்று தன் தாயைக் கேட்

டான். முன்பு குடும்பம் அடைந்திருந்த சிறுமையைத் தாய் விரித்துரைத்தாள். இவனது உள்ளம் கொதித்தது. 'நான் எனது குடும்பத்தைப் பழைய நிலைமைக்குக் கொண்டு வருவேன்' என்று உறுதி பூண்டான். சிறிது பொருளைக் கடனாகப் பெற்றான். அதனை முதற்பொருளாகக் கொண்டு வாணிகம் தொடங்கினான். சிறிது காலத்திலே நல்ல ஊதியம் கிடைத்தது. இவன் தளரா முயற்சிகொண்டு பெருக்கங் காட்டினான். தெய்வமும் அவனுக்குப் பக்கத்துணையாக நின்றது. விரைவிற் பொருள் குவிந்தது. கடன் முழுவதையுங் கொடுத்துத் தீர்த்தான். இராப்பகல் விடா முயற்சியோடு பெருக்கங் காட்டி நின்று உழைத்தமையால் செல்வம் அளவிறந்துண்டாயது, குடும்பம் முன்னைய நிலைமையினும் பன்மடங்கு உயர்ந்துபோயது. திருமணத்திற்குத் தக்க பருவமடைந்து நின்ற தன் உடன்பிறந்தார்களுக்குத் திருமணஞ் செய்து வைத்தான். தான தருமங்களை ஊனமுண்டாகாமல் இயற்றினான். இவனது தளரா ஊக்கத்தையும், அதனால் அவன் அடைந்த ஆக்கத்தையும் பலரும் கண்டு மகிழ்ந்தனர். 'நான் என்னுடைய குடும்பத்தை உயரச் செய்வேன்' என்னும் ஊக்கமுடைய ஒருவனுக்குத் தெய்வந் துணைநிற்குமென்பது அனைவராலும் நன்கு உணரப்பட்டது.

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.

குடிசெயல்வகை, செய். 3.

(இ - ள்.) எனது குடியினை உயரச் செய்வேன் என்னும் முயற்சியினையுடைய ஒருவனுக்குத் தெய்வமானது, உடையை இறுகக் கட்டிக்கொண்டு, தான் முன்னே வந்து நிற்கும்.

## ௩௫. குலமகள்போல நிலமகள் ஊடுவள்

சோழவளநாட்டிலே தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஒரு சிற்றூரிலே நூற்றைம்பது யாண்டுகட்கு முன்னர் ஒரு குடியானவன் இருந்தான். அவன் தன்னுடைய விளைநிலங்களைத் தன் மேற்பார்வையில் சாகுபடி செய்துகொண்டிருந்தான். அவன் நாள்தோறும் காலை மாலை இரண்டு வேளைகளிலும் தன்னுடைய நிலங்களைச் சென்று சுற்றிப்பார்ப்பான். வரப்புகளிலும் பிறவிடங்களிலும் கிடக்கும் சாணம் முதலியவைகளை எடுத்து வயலிலே போடுவான். தகுந்த காலத்திலே உழுது நிலத்தைக் காயவிடுவான். இவ்வாறு அவன் செய்துகொண்டிருந்தபடியால், நிலம் மிகுந்த விளைவைக் கொடுத்தது. விளைபொருள்களை மிகுதியாக விற்றபடியால் குடியானவனுடைய கைக்குப் பொருள் மிகுதியாகச் சேர்ந்தது. அதனால் அவனுடைய மனந் திரிந்தது. மிகுந்த பொருள் படைத்த தான் வயலுக்குச் செல்வதும் தொழில் புரிவதும் இழிவு என்று எண்ணினான். எல்லாவற்றிற்கும் ஆட்களை நியமித்துவிட்டுத் தான் வீட்டிலேயே படுத்துக் கிடந்தான். பொருள் மிகுந்தபொழுது நிலங்களை மிகுதியாக வாங்கியமையே குடியானவனுடைய இந்த மன மாற்றத்திற்குக் காரணம்.

குடியானவன் வயலுக்குச் செல்வதை நிறுத்தவே நிலங்கள் நன்கு போற்றப்படவில்லை. கூலிக்கு அமர்த்தப்பட்ட ஆட்கள் கடனுக்கு வேலையைச் செய்தனர். வயலின் வரப்பில் ஒரு கொட்டுச்சாணி கிடப்பின் அஃது அப்படியேதான் கிடக்குமே தவிர, அதனை எடுத்து யாரும் வயலிற் போட்டுவிடமாட்டார்கள்.

களைகளைக் கண்டாலும் அதனைக் களைந்தெறியமாட்டார்கள். ஆட்களுடைய பராமரிக்கும் கூலியைப் பெறுவதில்தான் இருந்தது. உடையவன் காலடியோசையேது, பின் எதிர்பார்ப்பதேது? நாளடைவில் விளைவு குன்றியது. முன்னைவிட இருமடங்கு மும்மடங்கு செலவுகள் இருந்தாலும்கூட முன்னர் வந்ததுபோல விளைவும் வருவாயும் வரவில்லை. விளைவு ஆட்களின் கூலிக்கும் குடும்பத்தாருடைய சாப்பாட்டுக்கும் கட்டுபடியாகாமலே இழப்பாய்விட்டது.

குடியானவன் நின்றொன்று விழித்துக்கொண்டான். வயலைப் பார்க்கப் புறப்பட்டுவிட்டான். வயலுக்குச் செய்யவேண்டிய கடமைகளைச் சரிவரச் செய்துவந்தான். பண்டுபோல் வருவாய் கிடைக்கத் தொடங்கியது. நாளடைவில் அவன் மிகுந்த செல்வப்பேற்றை யடைந்து சிறந்து திகழ்ந்தான். ஆகவே, நிலத்திற்குரியவன் அதனைச் சென்று பார்த்து ஆவன புரிய வேண்டியது கட்டாயமாகும்.

செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்(து)
இல்லாளின் ஊடி விடும்.

உழவு, செய். 9.

(இ - ள்.) நிலத்துக்குரியவன் நிலத்திற்கு நாள்தோறுஞ் செல்லாது முயற்சி குன்றியிருந்தால், நிலமானது தன்னை யுடையவனுக்கு வளங் கொடுத்தலிலே வெறுத்து, மனைவியைப் போலப் பிணங்குதலைக் கொண்டுவிடும்.

## [illegible]. வறுமையால் வாடிய புலவர்

தமிழகத்திலே வாழ்ந்திருந்த புலவர்களுள் பலரை வறுமை சிறுமையுறப் பற்றிநின்றது. அவர்கள் ஈகையுள்ளம் அற்ற இழிஞர் மீதும் செய்யுட்கள்பாடி அல்லற்பட்டனர். ஒரு புலவர் ஒரு செல்வன் தன்மையை உணராமல் அவன் மீது கோவை என்னும் நூல் ஒன்றைப் பாடிக்கொண்டுபோய்ப் படித்தார். கோவை என்பது நானூறு பாடல்கள் கொண்ட ஒரு நூல். நானூறு பாடல்கள் பாடிய புலவருக்கு அச்செல்வன் மூன்றுபடி பெருவரகைக் கொடுத்தான். கோவையால் தம் வறுமை தீர்ந்துபோகுமென்று மகிழ்ந்து சென்ற புலவர் மூன்றுபடி பெருவரகைக் கண்டு ஏமாந்து வாடினார்.

ஒரு புலவருக்குக் குடும்பம் பெரிதாகிவிட்டது. மக்கள் பலர் புற்றீசல்போலத் தோன்றினர். மக்களின் எண்ணிக்கை பதின்மூன்றுக்குப் போய்விட்டது. புலவரோ ஏட்டைப் புரட்டிக்கொண்டு இனிது அமர்ந்திருந்தார். ஒருகாசுக்குக்கூட வழியிருக்கவில்லை. மனைவி அயல் வீடுகள் எல்லாவற்றிலும் காசு, அரிசி, உப்புப் புளி மிளகாய் முதலியவற்றைக் கடன் வாங்கி விட்டாள். இனி, கடன்கொடுப்பார் எவருமில்லை. மனையில் நிலைமை நெருக்கடியாகி விட்டது. வீட்டிலிருந்த ஏனம் முதலியவைகள் எல்லாம் அடகாகப் போய் விட்டன. அந்நிலைமையிலும் புலவர் இலக்கணநூல் ஒன்றுக்கு உரையை எழுதிக் கொண்டிருந்தார். அவ்வுரையை அவர் எழுதி முடித்தாலும் அதனால் அவருக்குப் பொருள் கிடைக்க வழியில்லை.

பொருள்களைக் கடன் கொடுத்தவர்கள் புலவர் மனைவியைப் பிடுங்கினார்கள். பிள்ளைகள், 'கஞ்சி கஞ்சி' என்று பறந்தனர் புலவர் மனைவியோ புலவரை நெருக்கினாள். கொல்லையிலிருந்த கீரைகளைப் பறித்து அவித்து அதைக்கொண்டு சிலநாள் பொழுது போக்கினார். குழந்தைகள் எல்லாம் புலவரைச் சூழ்ந்து கொண்டு கதறிக்கொண்டு கூச்சலிட்டன. பசியின் கொடுமையைப் பச்சைக் குழந்தைகள் எவ்வாறு தாங்குவர்? புலவரின் அறிவு வறுமையின் கொடுமையால் கொள்ளை போய்விட்டது. அவரால் மேற்கொண்டு உரையை எழுத முடியவில்லை. வறுமைத் தீயின் கொடுமையைத் தாங்கமுடியாமல் புலவர் வெய்யிலிற் போட்ட புழுப்போலத் துடித்தார். 'நெருப்பின் மீது வேண்டுமானாலும் படுத்துறங்கலாம். இந்த வறுமைக் கொடுமையில் ஒன்றுமே செய்யமுடியாது' என்று அலறினார். எழுந்து ஓர் அரசனிடஞ் சென்றார். செல்லும்பொழுதே அவ்வரசனுடைய பெருமைகளை யெல்லாம் ஓர் அகவற்பாவாக அமைத்து இறுதியில் தமது வறுமைக்கொடுமையையும் எழுத்தோவியத்தில் எழுதிக் காட்டினார். பாட்டைக்கேட்ட மன்னன் மூட்டை மூட்டையாகப் பொருளை வாரிக்கொடுத்தான். அதனைக்கொண்டு புலவர் தம்முடைய வறுமையைப் போக்கினார்.

**நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்**
**யாதொன்றுங் கண்பா டரிது.**

**நல்குரவு, செய். 9.**

(இ - ள்.) நெருப்பினுட் படுத்துறங்குதலும் ஒருவனுக்குக் கூடும்; வறுமை வந்தவிடத்து யாதொன்றாலும் உறங்குதல் மிகவும் அருமையானதாம்.

## ௬௭. புல்லனும் புலவனும்

வறுமையால் வாடிய ஒரு புலவர், ஒரு செல்வன் மீது செய்யுள் பாடிக்கொண்டு சென்றார். அவன் இழிகுணமும் கையழுத்தமும் பொருந்தியவன். புலவர் அவனுடைய இயல்பு தெரியாமல் அவனிடஞ் சென்று விட்டார். புலவனுக்கும் அக் கீழ்மகனுக்கும் பின்வருமாறு உரையாடல் நிகழ்ந்தது.

புல் :—புலவீர்! விளைவு குறைவு இல்லாத இந்தக் காலத்தில் எம்முடைய ஊரையும் பேரையும் உசாவித் தாங்கள் இவ்வளவு தொலை வந்தது யாது காரணமோ?

புல :—(புலவர் முப்பத்திரண்டு பற்களையும் வெளியே காட்டினார். இரண்டு கைகளையும் நீட்டினார். புன்சிரிப்புக்கொண்டார்.) உங்களுடைய பெருமைகளையெல்லாம் நாம் கேள்விப்பட்டோம். தங்களைப் பார்த்துவிட்டுப் போகவேண்டுமென்னும் அவா நம்முடைய உள்ளத்தில் தோன்றியது. தங்கள் மீது சில செய்யுட்கள் இயற்றிக் கொண்டு வந்திருக்கிறோம்.

புல் :—புலவரே! நம்முடைய வீட்டில் ஒரு திங்களாகப் பெண்பிள்ளைக்கு உடல்நலமில்லை. அவள் பிழைப்பது மிகவும் அருமையாக இருக்கிறது. அவளைப் பார்ப்பதற்காக வரும் விருந்துகளுக்கோ கணக்கு வழக்கில்லை. இவ்வூரில் ஒரு தீய மருத்துவன் இருக்கிறான். அவன் கைத்தாதைப் பிடித்துப் பார்க்குமுன் என் பைத்தாதை (பையிலுள்ள பொன்னை)ப் பறிக்கத் தொடங்கிவிட்டான். அவன் பற்றாது பற்றாது என்று கூறி அளவற்ற

பொருள்களைப் பறித்துவிட்டான். அதனால் என் வயிறு பற்றி எரிந்துகொண்டிருக்கிறது. ஆகையால், இப்போது உம் புலமைப் பாட்டைக் கேட்டுக் கொண்டிருக்க முடியாது. போய்விட்டு வாரும்; இன்னொரு நாளைப் பார்த்துக்கொள்ளலாம்.

இவ்வாறு செல்வன் கூறிய மொழிகளைப் புலவர் கேட்டார். 'நீ கொடுக்கக்கூடிய நிலைமையில் உள்ளவன் என்று உன்னிடம் வந்தேன். நீ இவ்வாறு கூறுகிறாய். இதனால் ஏற்படுகின்ற பழி உன்னைத்தான் சேர்ந்ததே தவிர எனக்கொன்றும் இல்லை' என்று கூறிவிட்டுப் புறப்பட்டார். புலவருக்கும் புல்லனுக்கும் நடந்த உரையாடல்களைக் கேட்டுக் கொண்டிருந்தவர்கள் 'இவன் இத்தகைய இழிதகைமையுடையவனா? இது நமக்குத் தெரியாது போயிற்றே' என்று கூறி எள்ளி நகையாடினார்கள்.

இரக்க இரத்தக்கார்க் காணிற் கரப்பின்
அவர்பழி தம்பழி யன்று.

**இரவு, செய். 1.**

**(இ-ள்.)** இரத்தலுக்குத் தகுதியானவர்களைக் கண்டால், அவரிடத்தே இரத்தலை மேற்கொள்க; அவர்கள் யாதுங்கொடாது ஒளிப்பார்களானால், ஒளிப்பார்க்குத்தான் பழியுண்டாகுமே யல்லாமல் தமக்குப் பழியாகமாட்டாது.

## ௯௮. உள்ளமுடைந்த ஒண்டமிழ்ப் புலவர்

மற்றொரு செல்வன்மீது வேறொரு புலவர் அருமையான செய்யுட்கள் பலவற்றைச் செய்துகொண்டு சென்றார். பாடல்கள் மிகவும் அருமையாக அமைந்தன. அப்பாடல்கள் புலவருக்கே மிகுந்த வியப்பை அளித்தன. அப் பாடல்களால் தம்முடைய வறுமை அடியோடு பறந்து ஓடிவிடும் என்று மனப்பால் குடித்துக்கொண்டு சென்றார். செல்வனைக் கண்டு பாட்டைப் படித்தார்.

அந்தச் செல்வன் பாடல்களைக் கேட்டான். அவனுடைய உள்ளத்திலே மிகுந்த சினம் உண்டாயிற்று. 'ஓ புலவரே! புலவர்களெல்லாம் என்னிடமே வந்து தொல்லை செய்வதென்று முடிவு செய்திருக்கிறீர்களோ! இவ்வுலகில் நான் ஒருவன்தானா உங்கள் கண்களுக்கு எதிர்ப்பட்டேன். உங்களுக்கு வேறொரு வேலையும் இல்லையோ? நாடோறும் வந்து தொல்லைப்படுத்துகிறீர்களே! என்னிடம் பொருளைக் கொண்டுவந்து கொட்டியா வைத்திருக்கிறீர்கள்? அல்லது நான் புதையல் ஏதேனும் எடுத்தேனோ? நீங்கள் பொய் சொல்வதற்குக் கற்றதுபோல் வேறு ஏதேனும் ஒரு தொழிலைப் புரிதற்குக்கற்றிருக்கக்கூடாதா? புலவர்கள் என்று கேள்விப்பட்டால் மனம் எரிகின்றதே! பொருள் என்னிடத்தில் இல்லை. உமக்கு ஒன்றுங் கொடுக்க முடியாது. நீர் எனக்கு வசவுரை வழங்கினாலும் வழங்கும்; அதன்பொருட்டு நான் சிறிதும் அஞ்சமாட்டேன்' என்று கடுத்து உரைத்தான்.

புலவர் எண்ணிவந்த எண்ணமெல்லாம் மண்ணாயிற்று. அவர் உள்ளம் புண்ணாயிற்று. எண்ணாதன

எல்லாம் எண்ணி எண்ணி நைந்தார். அந்தோ! நான்முகன் என்னை இவ்வாறு படைத்தானே! அவன் நன்றாக இருப்பானோ? அவன் கல் மண் முதலியவைகளைக் காய்ச்சிக் குடிப்பதற்கு எனக்கு ஏன் அறிவுறுத்தியிருக்கக்கூடாது? அல்லது பொன் பொருள் முதலியவைகளையேனும் எனக்குக் கொடுத்திருக்கக்கூடாதா? நான் பலரையும் இகழ்ந்து நொந்து ஆவதால் என்ன பயன் ஏற்படப் போகிறது? இவ்வாறு நான் தொல்லைப்பட்டுப் பல்லைக் காட்டிக்கொண்டு திரியுமாறு படைத்தானே' என்று கூறிப் புலம்பினார். இனிமேல் எவரிடமும் சென்று இரப்பது இல்லையென்று உறுதிகொண்டார். இரவென்னும் பாதுகாப்பற்ற மரக்கலமானது இரவலர்க்குப் பொருள்கொடாது மறைத்தல் என்னும் வன்னிலத்தில் மோதப் பிளந்துபோகும் என்னும் குறளுக்கு, இப்புலவரே எடுத்துக்காட்டாக அமைந்தார்.

இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

**இரவச்சம், செய். 8.**

(இ - ள்.) இரத்தல் என்னும் பாதுகாப்பற்ற மரக்கலமானது சென்று ஒளித்தலென்னும் வன்னிலத்தோடு மோதப், பிளந்து விடும்.

## ௩௪. கொள்ளை கொடுத்த வெள்ளையப்பன்

பாண்டிநாட்டிலே மாநகர் என்னும் ஊரிலே, இற்றைக்குப் பல்லாண்டுகட்கு முன்னர் வெள்ளையப்பன் என்னும் பெயருடைய ஒரு செல்வன் இருந்தான். அவனிடம் கீழ்மைக் குணங்களெல்லாம் கிழமையாக அமைந்துநின்றன. உண்டபின் வெளியே போடும் இலையில் உள்ள எச்சிற்சோறு முதலியவற்றை நாய் காக்கை முதலியவைகள் தின்னுதற்கூடப் பொறுக்க மாட்டான். அவைகளை விரட்டிவிடுவான். பொருளைக் கண்டவாறு சேர்ப்பதிலேயே முழுக் கருத்தையும் செலுத்திநின்றான். அவனுடைய தன்மையறியாமல் அறிஞர்களும் வறிஞர்களும் அவனுடைய இல்லத்துக்குச் சென்றனர். அவர்கள் மீதெல்லாம் அக்கயவன் கொடிய நாயொன்றை ஏவிவிட்டுத் துரத்திவந்தான். பலரும் அத்தீயவனை இகழ்ந்து பழித்துச் சென்றனர்.

அக்கயவனிடம் பொருள் மிகுதியாகக் குவிந்திருப்பது பலருக்குந் தெரிந்தது. அவனிடம் கடன் வாங்கிக் கொண்டு ஏய்க்கவேண்டுமென்னும் எண்ணத்துடன் பலரும் சென்று கடன் கேட்டனர். அக்கயவன் பெரிய பக்காப்பேர்வழியாக இருந்தமையின், தக்க ஈடு இல்லாமல் கடன் கொடுக்கமுடியாது என்று உறுதியாகக் கூறி மறுத்துவிட்டான். தக்கபடியாக ஏதேனுஞ் சாத்துபடி செய்தால்தான் அவன் ஒழுங்கிற்கு வருவான் என்று சிலர் முடிவுகட்டினர். ஒருநாளிரவு அஞ்சத்தக்கவாறு மாறுகோலம் பூண்டு நீண்ட தடிகளுடன் ஏழெட்டுப்பேர் வெள்ளையப்பன் வீட்டிற்குள் நுழைந்தனர்.

பொருளைக் கள்ளர்கள் வந்து தட்டிக்கொண்டு போய்விடுவார்கள் என்னும் நோக்கத்துடன், வெள்ளையப்பன் தன்னுடைய பொருள்களை உள்ளறையில் புதைத்து வைத்திருந்தான். கொள்ளைக்குச் சென்ற கள்ளர்கள், 'பொருளை எங்கே புதைத்து வைத்திருக்கிறாய்? எடு விரைவில்!' என்று அதட்டினர். வெள்ளையப்பன் எளிதிற் பொருளைக் கொடுத்துவிடுவானா? 'என்னிடத்தில் ஒன்றும் இல்லை. நான் மிகவும் வறியவன்; என்னை ஒன்றுஞ் செய்யாமல் விட்டுவிடுங்கள்" என்றான். சிலர் வெள்ளையப்பன் கூறுவது உண்மையாகவிருக்குமோ என்று எண்ணினர். சிலர் தக்கபடியாகப் போடாவிட்டால் பொருளைக் கொடுக்கமாட்டான். 'மயிலே மயிலே இறகுபோடு என்றால், அது போடுமா? அழுத்திப் பிடித்தன்றோ பிடுங்கவேண்டும் என்றனர். வேறு சிலர் 'பளீர் பளீர்' என்று வெள்ளையப்பன் கன்னத்தில் வெளுத்து வாங்கினர். அடிகளை வெள்ளையப்பனாற் பொறுக்க முடியவில்லை. புதைத்து வைத்திருந்த இடத்தைக் காட்டிவிட்டான். அவர்கள் அதனை அகழ்ந்து எடுத்துக்கொண்டு விரைந்து சென்றுவிட்டனர். கயவர்கள் தக்கபடியாகப் போடாதவர்கட்கு யாதும் ஈயார்கள் என்பதை வெள்ளையப்பன் உலகிற்குணர்த்தி நின்றான்.

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கையர் அல்லா தவர்க்கு.

கயமை, செய். 7.

(இ - ள்.) இம்மக்கள் தம் கன்னத்தைத் தகர்க்கும் குறுக்கிடைகையினை யுடையரல்லாதார்க்கு, உண்டபின் கழுவிய ஈரக்கையைக் கூட உதறமாட்டார்கள்.

## ௭௦. தன்னையும் விற்ற தடிச்சொக்கன்

சிறுகுளத்தூர் என்னும் ஊரிலே சொக்கன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் அறிவிற் சிறந்தவன் அல்லன். அவனுடைய பெற்றோர்கள் அவனுக்குக் கல்வி அறிவையும் உண்டாக்கவில்லை. இளமை முதற்கொண்டே அடங்காக்குணம் உடையவனாய் நல்லவர்கள் பலருக்குத் அல்லல் விளைவித்துக்கொண்டிருந்தான். அவன் தன்னைப் போன்ற கீழ்மக்களைத்தான் ஒருபொருட்படுத்தி மதிப்பானே தவிரப், பெரியோர்களையோ அறிவாளிகளையோ ஒரு பொருட்படுத்தமாட்டான். சொக்கன் இகழ்ந்து பேசுவதைக் கேட்டவர்கள், 'அறிவற்ற கீழ்மகன்தானே பேசினால் பேசிவிட்டுப் போகிறான்' என்று பேசாமற் போய்விடுவார்கள்.

சொக்கனுடைய கீழ்மைக்குணம் நாள்தோறும் வளர்ந்தோங்கி வந்தது. எல்லோரும் தன்னிடத்தில் அஞ்சி நடக்கிறார்கள் என்று, தான் மிஞ்சி நடக்கத் தொடங்கினான். ஒருமுறை அரசாங்க அலுவலாளன் ஒருவன் சிறுகுளத்தூருக்கு வந்தான். "ஊரார்கள் ஊரை உடல் நலத்திற்கு ஏற்றமுறையில் தூயதாக வைத்துக்கொள்ளுதல் வேண்டும். தூய்மை இல்லாமல் ஊரை நாற்றப்படுத்துவதனால்தான் காலரா என்னும் கழிச்சல் நோய் முதலியன வந்து மக்களைக் கொள்ளை கொண்டுபோய் விடுகின்றன" என்பன போன்ற அறிவுரைகள் பலவற்றைக் கூறினான். சொக்கன் அரசாங்க அலுவலாளனைப் பார்த்துச், 'சரிதான் எல்லாம் எங்கட்குத் தெரியும் போடா" என்று மிகத் துடுக்காகப் பதிலுரைத்தான். சொக்கன் சொல்லியவை

களைக் கேட்ட அளவில் அரசாங்க அலுவலாளனுக்கு மிகுந்த சினம் உண்டாகிவிட்டது. அவன், தடிச்சொக்கன் தன்னை இகழ்ந்து பேசியதாகவும் அடித்ததாகவும் மேல் அலுவலாளர்கட்குத் தெரியப்படுத்திவிட்டான்.

மேல் அலுவலாளர்கள் தடிச்சொக்கன் மீது வழக்குத் தொடர்ந்தனர். தடிச்சொக்கன் பொதுமக்கள் இடத்தில்தான் தன்னுடைய திக்குணத்தையும் ஆணவத்தையும் அச்சம் இல்லாமல் காட்டினனே தவிர அரசியலாரிடம் காட்ட முடியவில்லை. அவன் எதிர் வழக்காடவும் துணியவில்லை. அறியாமை மிகுந்த அவன் தன்னால் இகழப்பெற்ற அந்த அலுவலாளனைக் கண்டு, 'நான் தெரியாமல் பேசிவிட்டேன் நீங்கள் என்னைக் காப்பாற்றவேண்டும்' என்று கெஞ்சினன்.

சொக்கனல் இகழப்பெற்ற அரசியல் அலுவலாளன் 'நீ என்னை இகழ்ந்து பலர்முன் என் மதிப்பைக் கெடுத்த குற்றத்திற்காக ரூபா ஆயிரம் கொடுப்பின் உன் குற்றத்தை மன்னித்துவிடச் சொல்லுகிறேன். இன்றேல் உன்னைப் பிடித்துச் சிறையில் அடைக்காமல் விடப்போகிறதில்லை' என்று அச்சுறுத்தினன்.

சொக்கனுடைய நண்பர்களாகிய தீயவர்களும் சொக்கனுக்கு உதவிசெய்ய முன்வரவில்லை. சொக்கன் தனக்கு இருந்த நிலம் முதலிய பொருள்களை விற்றதில் அறுநூறு ரூபாதான் அகப்பட்டது. மேலும் ரூபா நானூறு அகப்படவில்லை. செல்வன் ஒருவனிடம் தான் அடிமையாய் இருப்பதாகக் கூறி, மேலும் நானூறு ரூபாய்கள் பெற்று ஆயிர ரூபாவையும் தன்னுடைய வாய்க் கொழுப்பினல் இகழப்பெற்றவனுக்குக் கொடுத்துவிட்டுத் தான் செல்வனுடைய பணியாளாய்

அமைந்துநின்றான். ஒரு துன்பம் வந்தபொழுது கீழ் மக்கள் தம்மையும் விற்றுக்கொண்டுவிடுவார்கள் என்னுஞ் செய்தி சொக்கனிடத்திலே நன்கு பெறப்பட்டது.

எற்றிற் குரியர் கயவரொன்று உற்றக்கால்
விற்றற்கு உரியர் விரைந்து.

**கயமை, செய். 10.**

(இ - ள்.) கீழ்மக்கள் எதற்கு உரியவர் எனின், ஒரு துன்பம் வந்து சேர்ந்த காலத்தில், அதற்காகத் தம்மைப் பிறர்க்கு விலையாக விரைந்து விற்றுவிடுவதற்கே உரியர் ஆவர்.